அனுதின மன்னா
வெளியீடு

# 40 லெந்து நாட்களுக்கான தியானங்கள்

## பாகம் 2



BIBLE MINUTES

# 40

# லெந்து நாட்களுக்கான தியானங்கள்

## பாகம் 2

கிளாடிஸ் சுகந்தி ஹாசிலிட்

**WOG BOOKS 20**

First Edition 2021

**Author:**

Sis. Gladys Sugandhi Hazlitt, Anudhina Manna Team

**Published by:**

Anudhina Manna Team & Bible Minutes

**Created by:**

Yesudas Solomon, Bible Minutes, www.WordOfGod.in

**Download:**

This book can be downloaded from www.WordOfGod.in and www.Archive.org web sites.

**Self-Printing:**

You can print this book yourself with the options A4 Size, Booklet Type, Both the sides printing. After printing, you can fold or cut in the middle.



**Facebook:**

https://www.facebook.com/anudhina.manna

**Email:**

anudhinamanna@gmail.com

# பொருளடக்கம்

# 1. இயேசு கிறிஸ்துவின் அன்பு

நான் என் ஜீவனை மறுபடியும் அடைந்துகொள்ளும்படிக்கு அதைக் கொடுக்கிறபடியினால் பிதா என்னில் அன்பாயிருக்கிறார். ஒருவனும் அதை என்னிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளமாட்டான்; நானே அதைக் கொடுக்கிறேன், அதைக் கொடுக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு, அதை மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் எனக்கு அதிகாரம் உண்டு. இந்தக் கட்டளையை என் பிதாவினிடத்தில் பெற்றுக்கொண்டேன் என்றார் - யோவான் 10:17-18.

இயேசுகிறிஸ்து மரிக்கவில்லை என்று ஒரு சாரார் கூறிக்கொண்டிருக்க, அவர் மரித்து காஷ்மீரில் அடக்கம் செய்யப்பட்டார் என்று ஒரு சாரார் கூறி கொண்டிருக்க, கிறிஸ்துவை பின்பற்றுகிறவர்களாகிய நாமோ வருடத்தின் ஒரு சில நாட்களில் மட்டுமல்ல, கர்த்தர் வருமளவும் அவருடைய மரணத்தையும், அவருடைய தியாகத்தையும், மரணத்தை ஜெயித்து உயிர்த்தெழுந்ததையும் நினைவுகூர கடமைப்பட்டிருக்கிறோம்.

கிறிஸ்து இந்த உலகத்தில் பிறந்தது உண்மை, வாழ்ந்தது உண்மை, மூன்றறை வருடங்கள் ஊழியம் செய்தது உண்மை, அநேக பாடுகள் பட்டு, சிலுவையில் மரித்ததும் உண்மை, அதேப்போல மூன்றாம் நாள் உயிரோடு எழுந்ததும் உண்மையிலும் உண்மை. நாம் மரித்த ஒரு கடவுளை ஆராதிக்கவில்லை, ஆனால் உயிரோடு எழுந்து இன்றும் நமக்காக பிதாவினிடத்தில் பரிந்து பேசி கொண்டு இருக்கும் உயிருள்ள தெய்வமாகிய கிறிஸ்துவையே ஆராதிக்கிறோம். எத்தனை ஆயிரம் பேர் வந்து அவர் மரிக்கவில்லை என்று

சொன்னாலும், நிரூபிக்க முயற்சித்தாலும் அவை வீணானது, பொய்யானது. அவர் மரித்தார், உயிர்த்தார் என்கிற உண்மையை யாராலும் மாற்ற முடியாது. அல்லேலூயா!

கிறிஸ்துவின் உயிரை எடுக்க யாருக்கும் அதிகாரமில்லை. 'நானே அதைக் கொடுக்கிறேன், அதைக் கொடுக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு, அதை மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் எனக்கு அதிகாரம் உண்டு' என்று இயேசுகிறிஸ்து கூறினார். அப்படியே சிலுவையில் அவரே தமது ஜீவனை பிதாவினிடத்தில் ஒப்புக்கொடுத்தவராக ஜீவனை விட்டார்.

உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்ப்பதற்காக அவர் தமது ஜீவனை சிலுவையில் அறையப்பட ஒப்புக்கொடுத்தார். அநேக முறை அவரை கொல்லுவதற்கு அப்போதிருந்த பரிசேயரும், சதுசேயரும் முயற்சித்தாலும், அவற்றிலிருந்து அவர் தப்பி, தம்மை பிதாவினுடைய சித்தத்தின்படி குற்றமற்ற தமது விலையேறப்பெற்ற இரத்தத்தை சிந்தி, மனுக்குலத்தின் பாவத்தை போக்கும்படி சிலுவையில் தமது கடைசி சொட்டு இரத்தத்தையும் சிந்தி, தம் ஜீவனை கொடுத்தார்.

கிறிஸ்து நமக்காக சிலுவையில் பட்ட பாடுகள் மிகவும் கொடியதாகும். மற்றவர்களால் தூஷிக்கப்பட்டு, துப்பப்பட்டு, சவுக்கால் அடிக்கப்பட்டு, கோர சிலுவையை சுமந்துகொண்டு கொல்கதா மலையின் மேல் ஏறினவராக தள்ளாடி நடந்து சென்ற இந்த உலகத்தை படைத்த சிருஷ்டிப்பின் நாயகர், தம் ஜீவனையே நமக்காக கொடுத்தபடியினால் அன்பு என்ன என்பதை விளங்கப்பண்ணினார்.

நாம் ஒவ்வொரு முறை பரிசுத்த பந்தியில் பங்கெடுக்கும்போதும் அவருடைய மரணத்தை நினைவு கூருகிறோம். அவரை நினைவுகூரும்படி கர்த்தர் கட்டளையிட்ட காரியம் இதுவே. ஆகவே பரிசுத்த பந்தியில் பங்கு பெறும் ஒவ்வொரு முறையும் அவருடைய மரணத்தை நாம் நினைவு கூர வேண்டியது முக்கியமாகும்.

கிறிஸ்து சிலுவையில் தொங்கியபோது அவர் ஏழு அருமையான வார்த்தைகளை மொழிந்தார். அந்த வார்த்தைகளை துக்க வெள்ளியன்று ஒவ்வொரு சபையிலும் பேசி, தியானித்து வருகின்றனர். கர்த்தர் சிலுவையில் மொழிந்த அந்த ஏழு வார்த்தைகளை குறித்து இந்த நாட்களில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வார்த்தையாக தியானிக்க இருக்கிறோம். கர்த்தர் சொல்லிய ஒவ்வொரு வார்த்தையிலும் வல்லமை உண்டு, ஜீவனுண்டு, அது நம்மை சீர்திருத்த வைக்கிற வார்த்தைகளாய் இருக்கிறபடியால், அவற்றை நாம் தியானிக்க வேண்டும். நாளைய தினத்திலிருந்து ஒவ்வொரு வார்த்தையாக நாம் தியானிக்க இருக்கிறோம். கர்த்தர் தாமே மகிமைப்படுவாராக. ஆமென் அல்லேலூயா!

கல்வாரி அன்பை எண்ணிடும் வேளை
கண்கள் கலங்கிடுதே
கர்த்தா உம் பாடுகள் இப்போதும் நினைத்தால்
நெஞ்சம் நெகிழ்ந்திடுதே

சிலுவையில் வாட்டி வதைத்தனரோ
உம்மை செந்நிறம் ஆக்கினரோ
அப்போதும் அவர்க்காய் வேண்டினீரே
அன்போடு அவர்களை கண்டீரன்றோ

*அப்பா உம் மனம் பெரிதே*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே நாங்கள் வருடத்தில் ஒரு காலத்தில் மட்டுமல்ல, ஒவ்வொரு நாளும் எங்களை தமது அன்பின் குமாரனுடைய இராஜ்யத்திற்கு உட்படுத்தின தேவனுடைய கிருபையை எண்ணி பார்த்தவர்களாக, கிறிஸ்துவின் மரணத்தையும், உயிர்த்தெழுதலையும் நினைவு கூர்ந்து அவருக்கு சாட்சியாக வாழ கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## 2. எல்லா நாமத்திற்கும் மேலான நாமம்

*ஆதலால் தேவன் எல்லாவற்றிற்கும் மேலாக அவரை உயர்த்தி, இயேசுவின் நாமத்தில் வானோர் பூதலத்தோர் பூமியின் கீழானோருடைய முழங்கால் யாவும் முடங்கும்படிக்கும், பிதாவாகிய தேவனுக்கு மகிமையாக இயேசுகிறிஸ்து கர்த்தரென்று நாவுகள் யாவும் அறிக்கைபண்ணும்படிக்கும், எல்லா நாமத்திற்கும் மேலான நாமத்தை அவருக்குத் தந்தருளினார் - பிலிப்பியர் 2:9-11.*

*1927ம் வருடம் ஸ்மித் விகிள்ஸ்வொர்த் (Smith Wigglesworth) என்னும் தேவ ஊழியர், ஒரு திறந்த சந்தைப் பகுதியில் பிரசங்கித்துக் கொண்டிருந்தார். அங்கு ஒரு மனிதன் அங்கு இருந்த விளக்கு கம்பத்தின்மேல் சாய்ந்துக் கொண்டு அவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தான். ஸ்மித் தன் பிரசங்கத்தை முடித்து விட்டு, அந்த மனிதனிடம் நேரடியாகச் சென்று, என்ன, உங்களுக்கு உடம்பு சரியில்லையா என்றுக் கேட்டார்.*

*அதற்கு அந்த மனிதன் தன்கைகளைக் காட்டினான். அதில் ஒரு கத்தி பளபளத்தது. அவன் சொனனான், தனக்கு துரோகம் செய்த மனைவியை கொல்வதற்காக தான் போய்க் கொண்டிருந்ததாகவும், அப்போது ஸ்மித் அவர்கள் பேசிக் கொண்டிருந்தததைக் கேட்டதாகவும், அவர் இயேசுவின் நாமத்திலுள்ள வல்லமையைக்குறித்து கேட்டபோது அவருக்கு அந்த இடத்திலிருந்து அசைய முடியாதபடி போனதாகவும் கூறினார்.*

அங்குதானே, இருவரும் முழங்கால்படியிட்டு, போவோர் வருவோர் நடுவே அந்த மனிதன் இயேசுவை ஏற்றுக் கொண்டார். பின் ஸ்மித் அவரை தன் வீட்டிற்கு அழைத்து சென்று, அவருக்கு வேறு ஆடைகளை கொடுத்து, கொஞ்சம் பணத்தையும் கொடுத்து, அந்த மனிதன் ஒரு வீடு வாங்க உதவி செய்து, அந்த மனிதனை விட்டு வேறு ஒருவனுடன் வாழ்ந்துக் கொண்டிருந்த அவருடைய மனைவியை மன்னித்து, தன்னோடு இருக்க அழைத்தபோது அவளும் வந்து, இருவரும் ஒன்றாக இணைந்ததாகவும், அந்த மனிதர் கர்த்தருடைய ஊழியத்தை வல்லமையாக நிறைவேற்றவும் தேவன் கிருபைச் செய்தார் என்றும் ஸ்மித் தன்னுடைய புத்தகத்தில் எழுதியிருந்தார். ஆம் இயேசுவின் நாமத்தில் வல்லமை உண்டு.

பில் கேட்ஸ், அம்பானி, லட்சுமி மிட்டால் இவர்களுடைய பெயர்கள் எல்லாம் மிகவும் அறியப்பட்டதாகவும், செல்வாக்குள்ள பெயர்களாகவும், உலகத்தில் பிரசித்திப் பெற்ற பெயர்களாகவும் இருக்கலாம். ஆனால் இயேசுகிறிஸ்துவின பெயரோ இவர்கள் எல்லாருடைய பெயர்களையும் சேர்த்து உள்ள வல்லமையை விட மிகப் பெரிய வல்லமை உள்ள பெயராகும். அவருடைய பெயர், மனிதனை இரட்சிக்க வல்லதாகவும், ஒரு மனிதனின் எண்ணத்தையும் செயல்களையம் மாற்ற வல்லதாகவும், உடைந்துப் போன குடும்பங்களை சேர்த்து வைக்க வல்லதாகவும், உடைந்த உள்ளத்தை காயம் கட்டுவதாகவும் உள்ள ஒரே நாமம் இயேசுகிறிஸ்துவின் நாமமே ஆகும்.

அந்த வல்லமையுள்ள நாமத்தில் தேவன் வானோர் பூதலத்தோர் பூமியின் கீழானோருடைய முழங்கால் யாவும் முடங்கும்படிக்கும், பிதாவாகிய தேவனுக்கு மகிமையாக

இயேசுகிறிஸ்து கர்த்தரென்று நாவுகள் யாவும் அறிக்கைபண்ணும்படிக்கும், எல்லா நாமத்திற்கும் மேலான நாமத்தை அவருக்குத் தந்தருளினார் ஆமென் அல்லேலூயா!

அந்த நாமத்தை உச்சரிக்கும் போதே பேய்கள் பறந்தோடும், வியாதிகள் பறந்தோடும், சாபங்கள் பற்நதோடும், பாவங்கள் உருண்டோடும். பிசாசுகள் பயந்தலறி ஓடும். அவருடைய நாமத்தில் யாவருடைய முழங்கால்களும் முடங்கும். இந்த உலகத்தில் அந்த நாமத்திற்கு ஈடு இணையான பெயர் வேறெதுவும் இல்லை. பிசாசு, பாவம் உலகை ஜெயித்த நாமம் இயேசுவின் நாமமே. தூதர்களும் வணங்கும் நாமம் இயேசுவின் நாமமே.

என் நாமத்தினாலே நீங்கள் எதைக் கேட்டாலும் அதை நான் செய்வேன் (யோவான் 14:14) என்று வாக்குதத்தம் செய்தவர் உண்மையுள்ளவராகவே இருக்கிறார். அவருடைய நாமத்தில் கேட்பதெல்லாம் நமக்கு தருவார். நம்மை இரட்சித்த நாமம் இயேசுவின் நாமமே, நம்மை பரலோகத்தில் சேர்க்கும் நாமம் இயேசுவின் நாமமே. இன்றும் அதிசயங்கள், அற்புதங்கள் செய்யும் நாமம் இயேசுவின் நாமமே. மரித்தோரை உயிரோடு எழுப்பும் நாமம் இயேசுவின் நாமமே. மரணப்படுக்கையில் இருக்கும் நோயாளியை சுகப்படுத்தும் நாமம் இயேசுவின் நாமமே. தற்கொலைக்கு நேராக ஓடும் மனிதனை தடுத்து நிறுத்தும் நாமம் இயேசுவின் நாமமே. புது ஜீவனை அவனுக்கு கொடுக்கும் நாமம் இயேசுவின் நாமமே. இப்படி சொல்லிக் கொண்டே போகலாம்.

இயேசுவின் நாமத்திற்கு இருக்கும் மகிமை சொல்லிக் கொணடே போனால் இந்த கட்டுரை முடிவடையாது.

அத்தனை அதிசயமான நாமம், நம்மை ஆறுதல் படுத்தும் நாமம்; இயேசுவின் நாமமே.. அந்த நாமத்தை சொன்னாலே நமக்குள் பரவசத்தைக் கொடுப்பது அந்த விலையேறப் பெற்ற நாமமே. அந்த நாமத்தை உறுதியாய் பற்றிக் கொள்வோம். இந்த இம்மையில் மாத்திரமல்ல, மறுமையிலும் நம்மை வழிநடத்தும் நாமம் அந்த நாமத்திற்கு மாத்திரமே உண்டு. ஆமென் அல்லேலூயா!

இயேசுவின் நாமம் இனிதான நாமம்
இணையில்லா நாமம் இன்ப நாமம்

பாவத்தை போக்கும் பயமதை நீக்கும்
பரம சந்தோஷம் பக்தருக்களிக்கும்

**ஜெபம்:** எங்களை நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, உம்மைத் துதிக்கிறோம். எல்லா நாமத்திற்கும் மேலான நாமம் எங்கள் இயேசுவின் நாமத்தில் இருப்பதால் உம்மைத் துதிக்கிறோம். அவருடைய நாமத்தின் மகிமையை நாங்கள் உணர நீர் எங்களுக்கு பாராட்டின கிருபைக்காக உம்மைத் துதிக்கிறோம். அவருடைய நாமத்தினாலே எங்கள் தேவைகளை சந்திக்கிறதற்காக நன்றி, எங்கள் நோய்களை தீர்ப்பதற்காக நன்றி, எங்கள் பாவங்களை நீக்குவதற்காக உமக்கு நன்றி. அரிய பெரிய பொக்கிஷமாக இயேசுவின் நாமத்தை மனிதர்களாகிய நாங்கள் உபயோகிக்கும்படியாக எங்களுக்கு நீர் கொடுத்தபடியினால் உமக்கு கோடா கோடி நன்றிகளை ஏறெடுக்கிறோம். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

## 3. என்னிடத்தில் வாருங்கள்

*வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன் - மத்தேயு 11:28.*

அமெரிக்காவில் நியூயார்க்கில் உள்ள சுதந்திர தேவியின் சிலையை அறியாதவர்கள் யாரும் இருக்க முடியாது. அந்த சிலை பிரான்ஸ் நாட்டினர் அமெரிக்கர்களுக்கு முழு உலகத்தின் விடுதலை மற்றும் ஜனநாயகத்தை நினைவுகூரும் ஒரு அடையாளமாக கொடுக்கப்பட்டது.

இந்த சிலை 1886ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 28ஆம் தேதி செய்யப்பட்டது. 1924ஆம் ஆண்டு ஒரு நினைவுச்சின்னமாக நிறுவப்பட்டது. அது விடுதலையை குறிக்கும் ஒரு சின்னமாக இன்றும் அங்கு நின்றுக் கொண்டிருக்கிறது.

அந்த சிலையின் காலின்கீழே எம்மா லாசரஸ் என்பவரால் எழுதப்பட்ட மனதை தொடும் வார்த்தைகள் பொறிக்கப்பட்டுள்ளது, அது:

*Give me your tired, your poor, your hurdled masses*
*Yearning to breath free, the wretched refuse of your teeming shore.*
*Send these, the homeless, tempest tossed, to me:*
*I lift my lamp beside the golden door*

அதை சுருக்கமாக சொல்லப்போனால், களைத்து, விடுதலைக்காக ஏங்கி தவிக்கிற ஒவ்வொருவரும் என்னிடம் வாருங்கள், நான் என் விளக்கை உயர்த்தி அவர்களுக்கு பொன்னாலான வாசலை அவர்கள் உள்ளே பிரவேசிக்க காணபிப்பேன் என்று பொருள்படும் வகையில் எழுதப்பட்டுள்ளது.

வேறு ஒரு வித்தியாசமான ஒரு நினைவுச்சின்னம் 2000 வருடங்களுக்கு முன் பூமியில் உயர்த்தப்பட்டது. அது இயேசுகிறிஸ்து தொங்கிய ரோமர்களின் சிலுவையே! அதில் தொங்கிய கிறிஸ்து இந்த பூமியில் உள்ள ஒவ்வொருவரையும் பார்த்து, 'வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்' என்று அழைக்கிறார். இந்த சுதந்திர தேவியின் சிலையோ மற்றவர்களின் எந்த நினைவு சின்னங்களோ விடுதலையையும், இளைப்பாறுதலையும் தரப் போவதில்லை. கிறிஸ்துவிடம் மாத்திரமே விடுதலை உண்டு, இளைப்பாறுதல் உண்டு.

இந்த நாட்களில் அதிகமாக களைப்புற்று, எங்கு சென்று யாரிடம் என் தேவைகளை சொல்ல முடியும்? யாரிடத்தில் எனக்கு இளைப்பாறுதல் கிடைக்கும் என்று தவிக்கும் ஒவ்வொருவருக்கும் நல்ல செய்தி உண்டு. இயேசுவிடம் வாருங்கள், அவரிடம் பாரத்தை வைத்து விட்டு, இளைப்பாறுதலை பெற்றுக் கொள்ளுங்கள். எத்தனயோ நாட்களாக வேலையில்லாமல் அவதிப்பட்டு கொண்டிருக்கிறேனே என்று நினைக்கிறீர்களா? கடனுக்கு மேல் கடன் வாங்கி எப்படி தீர்க்க போகிறேன் என்று கலங்குகிறீர்களா? என் பிரச்சனை யாராலும் தீர்த்து வைக்க

*முடியாதது என்று களைப்போடு இருக்கிறீர்களா? யாராயிருந்தாலும் பிரச்சனைகளை தீர்த்து வைத்து, உங்களுக்கு வாழ்வை கொடுக்க இயேசுகிறிஸ்து காத்திருக்கிறார். அவர் மேல் உங்கள் பாரத்தை வைத்து விடுங்கள். அவர் உங்களை ஆதரிப்பார். அவர் உங்களை விசாரிப்பார்.*

*“என்னிடத்தில் வாருங்கள், நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்” என்று அழைத்து நமக்கு விடுதலையையும், இளைப்பாறுதலையும் தருபவர் நம் இயேசு மட்டுமே. அவருடைய அழைப்பை ஏற்று அவரிடம் சென்று நம் பாவத்தினின்றும், வறுமையிலிருந்தும், நோய்களிலிருந்தும் விடுதலைப் பெற்று, இளைப்பாறுதலையும் பெற்றுக் கொள்வோமாக! ஆமென் அல்லேலூயா!*

*இளைப்பாறுதல் தரும் தேவா*
*களைத்தோரை தேற்றிடுமே*
*சிலுவை நிழல் எந்தன் தஞ்சம்*
*சுகமாய் அங்கு தங்கிடுவேன்*

*திருப்பாதம் நம்பி வந்தேன்*
*கிருபை நிறை இயேசுவே*
*தமதன்பை கண்டடைந்தேன்*
*தேவ சமுகத்திலே*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, எங்களுக்கு விடுதலை மற்றும் சுதந்திரம் தருவதாக எத்தனைப் பேர் சொன்னாலும் அவையெல்லாம் உண்மையான விடுதலையை*

தருபவை அல்ல, எங்கள் இயேசுகிறிஸ்துவின் மூலம் மாத்திரமே விடுதலை பெற முடியும் என்பதையும், சத்தியமாகிய கிறிஸ்துவை அறிவீர்கள், அவர் உங்களை விடுதலையாக்குவார் என்ற வசனத்தின்படி விசுவாசித்து பாவத்தினின்றும், சாபத்தினின்றும், வியாதியிலிருந்தும் விடுதலையை பெற்றுக் கொள்ள தயவு செய்யும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

## 4. சிலுவையின் உபதேசம்

*சிலுவையைப் பற்றிய உபதேசம் கெட்டுப்போகிறவர்களுக்குப் பைத்தியமாயிருக்கிறது, இரட்சிக்கப்படுகிற நமக்கோ அது தேவபெலனாயிருக்கிறது - 1 கொரிந்தியர் 1:18.*

*பிரபல தேவ ஊழியரான பில்லி கிரகாம் அவர்கள் கீழ்கண்ட சம்பவத்தை குறித்து தனது புத்தகத்தில் எழுதியுள்ளார்:*

*ரான் பாக்கர் (Ron Baker) என்னும் மனிதரின் வாழ்க்கையில் எல்லாமே தலை கீழாக போய் கொண்டிருந்தது. அவர் தனது சிறுவயதில் பட்ட கெட்ட அனுபவங்களால், சரியாக பேச கூடாதவராக, மற்றும் படிக்காதவராக இருந்தார். அவர் சரியான குடிகாரனாக மாறினார். சூதாட்டத்தில் பங்கு பெறுபவராக, அதைவிட மோசமாக, செய்வினை பில்லி சூனியம் போன்ற கொடிய பழக்கங்களிலும் ஈடுபட்டிருந்தார். அவர் ஒரு பஸ் டிரைவராக வேலைபார்த்தாலும், அவர் தினமும் மதுபான கடைக்கு போய், குடித்து விட்டு, வீட்டுக்கு வந்து மனைவியை உதைப்பது வழக்கம்.*

*அவர் பஸ் ஓட்டுநராக இருந்த காரணத்தால், பில்லி கிரகாமின் கூட்டங்களுக்கு மக்களை கொண்டு செல்பவராக நான்கு நாட்கள் பணியாற்றினார். ஒரு நாள் வேலை முடிய மிகவும் தாமதமானபடியால், அவரால் குடிக்க முடியாமல் போனது. மிகவும் கோபத்துடன் வந்த அவரிடம் அவரது நண்பர், பில்லிகிரகாமின் கூட்டங்களுக்கு அழைத்தார். ஆனால் அவருக்கு இருந்த கோபத்தில் அந்த நண்பரை கன்னாபின்னாவென்று திட்டினார். மனைவி அவரிடம்*

சொன்னார்கள், நான் நான்கு நாளாக அந்த கூட்டங்களுக்கு போய் வருகிறேன். கர்த்தர் கிரியை செய்தார், நான் கர்த்தரிடம் என் வாழ்க்கையை அர்ப்பணித்தேன். நீங்களும் போய் வாருங்கள் என அவர்களும் கூறினார்கள். ஆனால் அவரோ, முடியாது என்று மனைவியையும் நண்பரையும் இன்னும் அதிகமாக திட்டினார். ஆனாலும் நண்பர் விடாப்பிடியாக, அவரை எப்படியோ சமாதானப்படுத்தி அவருடைய கூட்டத்திற்கு அழைத்து சென்றார்.

கூட்டத்தில் இருந்த ரான், மேடைக்கு வெகு தூரத்தில் உட்கார்ந்து கேட்டு கொண்டிருந்தார். அவரது இருதயத்தில் இந்த மனுஷன் சொல்கிறது எல்லாம் குப்பை என்று நினைத்து கொண்டே கேட்டு கொண்டிருந்தார். அந்த இரவிலே தேவன் அவரை தொட்டார். அவர் தன் வாழ்வை கிறிஸ்துவுக்கு அர்பணித்தார். அதன்பின் இரண்டு வருடங்கள் அவர் குடி பழக்கத்தை விட போராடினார். ஆனால் தேவன் அவரை கிருபையாக அந்த பழக்கம் மற்றும், பில்லி சூனிய கட்டுகளிலிருந்து அவரை விடுவித்தார். ஒரு நல்ல கிறிஸ்தவ பேச்சு பயிற்சியாளர் மூலம் நன்கு பேசவும் பழகி, படிக்கவும் ஆரம்பித்தார். ஒரு வேதாகம கல்லூரியில் சேர்ந்து, வேதத்தை முறையாக கற்று, ஆஸ்திரேலியா முழுவதும் கர்த்தரின் நாமத்தை பறைசாற்றுகிற வல்லமையுள்ள ஊழியராக மாறினார். நம் தேவனால் கூடாத காரியம் ஒன்றுண்டோ?

அன்பார்ந்தவர்களே, இயேசுகிறிஸ்துவிடம் வரும்போது, நாம் இலவசமாக இரட்சிக்கப்படுவது மட்டுமன்றி, நம்முடைய ஆவி ஆத்துமா சரீரத்தில் முழுவதிலும் முழு சுகத்தையும் அடைகிறோம். அதற்கு மேற்கண்ட உண்மை சம்பவம் உறுதிபடுத்துகிறதல்லவா?

*சிலுவையைப் பற்றிய உபதேசம் கெட்டுப்போகிறவர்களுக்குப் பைத்தியமாயிருக்கிறது, இரட்சிக்கப்படுகிற நமக்கோ அது தேவபெலனாயிருக்கிறது. இந்நாட்களில் கிறிஸ்துவை குறித்து, உபதேசங்களை கேட்கும்போது, அநேகருக்கு அது பைத்தியமாக தோன்றுகிறது. இந்த கிறிஸ்தவர்களுக்கு வேறுவேலையில்லை என்று கூறுகிறவர்களும் உண்டு. ஆனால் அந்த இரட்சிப்பை பெற்றுக்கொள்கிறவர்களுக்கோ, அது தேவபெலனாய், நமது நம்பிக்கையாய், நமது எதிர்காலமாய், நமது ஜீவியத்தையே மாற்றுகிறதாக இருக்கிறது.*

*கிறிஸ்துவினுடைய உபதேசம், ஒரு வேளை சிறந்த சொற்பொழிவாற்றுபவர்களால் கூறப்படாமல் இருக்கலாம், ஆனால், அது பாவ மனிதனை பாவத்திலிருந்து வெளிவர செய்கிறது. ஒருவேளை அது பெரிய தொழில் சம்பந்தபட்டதாக இல்லாமல் இருக்கலாம், ஆனால் அநேக தொழிலதிபர்களும், கோடீஸ்வரர்களும் தங்கள் வாழ்வை கிறிஸ்துவுக்கு ஒப்புகொடுக்க காரணமாய் இருக்கிறது. அந்த உபதேசம், மருந்து கொடுக்கிற சீட்டாக இல்லாமல் இருந்தாலும், ஆனால் எத்தனையோ கோடிக்கணக்கானவர்கள், அந்த உபதேசத்தினால் ஆத்மீக சரீர சுகமடைந்திருக்கிறார்கள்.*

*ஏன் அந்த உபதேசத்திற்கு அத்தனை ஆற்றல் என்றால், அது இயேசுகிறிஸ்துவாகிய உலக இரட்சகரை பற்றினது. அவரே நமது விசுவாசத்தின் துவக்கமும் முடிவுமாய் இருக்கிறார், அவரே ஆதியும் அந்தமுமாக, வழியும் சத்தியமும், ஜீவனுமாக இருக்கிறார். அவரே நமது இரட்சிப்பின் தலைவராக, உலகத்தில் வந்த எந்த மனிதனையும் பிரகாசிப்பிக்கும் ஒளியாக, உலகத்தில் வந்த எந்த மனிதனையும் தமது விலையேறப்பெற்ற இரத்தத்தால்*

*கழுவி சுத்திகரிப்பவராக, அவரே நமது சமாதான கர்த்தராக, தேவனுடைய ஒரே பேறான குமாரனாக, இருப்பவராகவே இருக்கிறவர். அவருடைய நாமமே அன்றி இரட்சிக்கப்படவதற்கு வேறொரு நாமம் கொடுக்கப்படவில்லை. அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனைபேர்களோ, அத்தனைபேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரங் கொடுத்தார். - (யோவான் 1:12).*

*இந்த அருமையான தேவனை போல் வேறு யாருண்டு? நமது பாவங்களை கழுவி நம்மை இரட்சித்து, நம்மை பரலோக ராஜ்ஜியத்திற்கு பங்குள்ளவர்களாய் மாற்றும் இந்த தேவனை போல யாருண்டு? இந்த தேவனை விசுவாசிக்கிறவர்கள் யாரும் வெட்கப்பட்டு போவதில்லை. அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; விசுவாசியாதவனோ, தேவனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாயிராதபடியினால், அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்பட்டாயிற்று (யோவான் 3:18). ஆமென் அல்லேலூயா!*

*இரத்தம் சிந்துதல் இல்லாமல் மன்னிப்பில்லை*
*இயேசு நாமம் சொல்லாமல் மீட்பு இல்லை*
*கூப்பிடு இயேசு இயேசு என்று*
*உன் குறைகளெல்லாம் நிறைவாக்கி நடத்திடுவார்*

*துன்பமா துயரமா*
*அது தண்ணீர் பட்ட உடை போன்றதம்மா*

காற்றடிச்சா வெயில் வந்தா
காய்ந்து போகும் கலங்காதே

**ஜெபம்:** எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, சிலுவையை பற்றிய உபதேசம் இரட்சிக்கப்படுகிற எங்களுக்கு தேவ பெலனாய் இருக்கிறதற்காய் உமக்கு நன்றி செலுத்துகிறோம். உம்மை விசுவாசிப்பதால் ஆக்கினை தீர்ப்பு இல்லாதபடி எங்கள் ஆத்துமாவை மரணத்தினின்று காக்கிறீரே உமக்கு ஸ்தோத்திரம் செலுத்துகிறோம். விசுவாசமுள்ளவர்களாய் உம்மை ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனைபேர்களோ, அத்தனைபேர்களும் உம்முடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரங் கொடுத்தீரே உமக்கு ஸ்தோத்திரம். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

# 5. பரிபூரண ஜீவன்

*திருடன் திருடவும் கொல்லவும் அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வரான். நானோ அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்கவும், அது பரிபூரணப்படவும் வந்தேன் - யோவான் 10:20.*

*ஒரு வீட்டின் சொந்தக்காரர் தன் வீட்டை ஒரு இலட்சத்திற்கு விற்க விரும்பினார். அதை மற்ற ஒருவர் எப்படியாவது வாங்க வேண்டும் என முயற்சித்தார். ஆனால் அவரிடம் அந்த அளவு பணம் இல்லாததால் அந்த வீட்டு சொந்தக்காரரிடம், பேசி, கடைசியில் அரை லட்சத்திற்கு அந்த வீட்டு சொந்தக்காரர் ஒரு நிபந்தனையின் பேரில் அதை விற்க ஒப்பு கொண்டார். அதன்படி, வீட்டின் சொந்தக்காரர் வீட்டு முன் கதவின் உட்புறம் ஒரே ஒரு ஆணியை மட்டும் அடிக்கவும் அந்த வீட்டை வாங்கினவர் ஒப்புக்கொண்டார். அதன்படி, ஒரு ஆணி மாத்திரம் அந்த வீட்டின் கதவில் அடிக்கப்பட்டது.*

*சில வருடங்கள் கழித்து, அந்த வீட்டின் சொந்தக்காரர் அந்த வீட்டை திரும்ப பெற விரும்பினார். ஆனால் வீட்டை வாங்கினவரோ அதை திரும்ப கொடுக்க மறுத்து விட்டார். அதனால் அந்த வீட்டின் சொந்தக்காரர், போய் ஒரு மரித்த நாயின் உடலை கொண்டுவந்து, தான் அடித்திருந்த ஆணியின் மேல் மாட்டி விட்டார். ஒரு செத்த நாய் வீட்டின் உள் இருந்தால், அந்த வீட்டில் குடியிருக்க முடியுமா? உடனே அந்த வீட்டை காலிபண்ணினார்கள், அந்த வீட்டை வாங்கியிருந்தவர்கள்.*

நாம் கர்த்தரை ஏற்று கொண்டபின் ஒரு சிறு பகுதியை நமக்கு என்று நம் இருதயத்தில் வைத்திருந்தாலும், சத்துரு அதை சொந்தம் கொண்டாட வருவான். திருடன் திருடவும் கொல்லவும் அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வரான் என்று வசனம் நமக்கு கூறுகிறது. சாத்தானாகிய திருடன் வரும்போது, கொல்லவும் அழிக்கவும், திருடவும் தான் வருவான். அவனால், எந்த நல்ல காரியத்தையும் செய்ய முடியாது. அப்படி அவன் வரும்போது, நம்முடைய ஆவிக்குரிய வாழ்கையை சூறையாடவும், கர்த்தருக்கும் நமக்கும் இடையே உள்ள உறவை அழிக்கவும் தான் வருவானேயன்றி, வேறொன்றுக்கும் வருவதில்லை.

சாத்தான் வந்து, நம்மிடம் சொந்தம் கொண்டாடும்படி அவனுடைய எந்த ஒரு பொருளும் நம்மிடம் இருக்க வேண்டாம். நம் முழு இருதயத்தையும் கர்த்தரிடம் ஒப்படைத்து விட்டு, அவரை எப்போதும் நம் முழு இருதயத்தோடும் அன்பு செலுத்த வேண்டும். நம் இருதயத்தில் ஒரு சிறு இடத்தை உலகத்திற்கென்று வைத்திருந்தாலும்;, நாளாக நாளாக, அந்த சிறு இடத்திலிருந்து பாவம் நம் இருதயத்தில் பிரவேசிக்க ஆரம்பிக்கும்.

ஒவ்வொரு நாளும் கர்த்தரிடம், 'எனக்குள் சத்துருவின் உரிமை கொண்டாடும் எந்த ஒரு காரியமும் காண்பபட வேண்டாம் தகப்பனே, அப்படியிருந்தால் அதை என்னை விட்டு அகற்றி போடும்' என்று ஜெபித்து, நாம் அவனை மேற்கொள்ள வேண்டும்.

திருடன் திருடவும் கொல்லவும் அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வரான். நானோ

அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்கவும், அது பரிபூரணப்படவும் வந்தேன் என்று இயேசுகிறிஸ்து கூறினார். சாத்தானாகிய அவன் நம் சரீர சுகத்தையும், ஆத்தும சுகத்தையும் திருட வந்தாலும், நாம் அவனுக்கு இடம் கொடுக்காதபோது, அவனுடைய பொருள் நம்மிடம் இல்லாதிருக்கும்போது, அவன் வந்து வெட்கத்தோடு போய் விடுவான்.

இயேசுகிறிஸ்துவோ, நமக்கு ஜீவனை கொடுக்கவும், அது பரிபூரணப்படவும் வந்தார். ஆகையால் கிறிஸ்துவை உடையவன், ஜீவனை உடையவன். கிறிஸ்து இல்லாதவன் ஜீவன் இல்லாதவன். கிறிஸ்து இல்லாதவர்கள் உயிரோடு வாழ்ந்தாலும், அவர்களுக்குள் ஜீவன் இருக்காது, மட்டுமல்ல, அவர்களுக்கு மறு வாழ்வில் தேவன் அவரை விசுவாசிக்கிறவர்களுக்கு கிருபையாக தருகிற நித்திய ஜீவனும் இல்லை. இயேசுகிறிஸ்து தருகிற ஜீவன் பரிபூரண ஜீவன். அதாவது நித்திய நித்தியமான ஜீவன். அதை பெறுகிற எவரும் தாங்கள் மரித்தாலும், நித்திய நித்தியமாய் ஜீவிப்பார்கள். என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான் என்று இயேசுகிறிஸ்து கூறினாரே!

இயேசுகிறிஸ்து தரும் நித்திய ஜீவனை பெற்று கொண்ட நாம், சத்துரு வெட்கப்படும்படி அவனுடைய எந்த ஒரு காரியமும் நம்மில் காணப்படாதபடி நம்மை கர்த்தருக்குள் காத்து கொள்வோமாக! பரிபூரண ஜீவனை தரும் கிறிஸ்துவை பற்றி கொள்வோமாக! ஆமென் அல்லேலூயா!

இயேசு எனக்கு ஜீவன் தந்தாரே
இயேசு எனக்கு ஜீவன் தந்தாரே
துதிப்பாடல் நான் பாடி இயேசுவையே போற்றி
என்றென்றும் வாழ்த்திடுவேன்

அல்லேலூயா ஆமென் அல்லேலூயா

**ஜெபம்:** எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, சத்துருவாகிய பிசாசானவன், திருடவும் கொல்லவும் அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வாரான் என்று கூறினீரே, எங்கள் வாழ்க்கையில் காணப்பட்ட அவனுக்கு சொந்தமான சில பகுதிகளினால், அவன் சொந்தம் பாராட்டி, எங்கள் வாழ்க்கையில் அவன் செய்த துன்பங்கள் அதிகம் தகப்பனே, நாங்கள் இனி அவனுக்கு இடம் கொடுக்காதபடி, எங்கள் முழு இருதயத்தையும் தேவரீருக்கே ஒப்பு கொடுக்கிறோம். எங்களுக்கு ஜீவனை கொடுத்து, அது பரிபூரணபடுத்த வல்ல உம்மிடமே ஒப்புகொடுக்கிறோம் தகப்பனே. நீர் ஏற்று கொண்டு எங்களிலே அரசாளுவீராக! இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

# 6. பூரண அழகுள்ளவர்

இயேசு இவைகளைச் சொன்னபின்பு, ஆவியிலே கலங்கி: உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பான் என்று, மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சாட்சியாகச் சொன்னார். அப்பொழுது யாரைக்குறித்துப் பேசுகிறாரோ என்று சீஷர்கள் ஐயப்பட்டு, ஒருவரையொருவர் நோக்கிப்பார்த்தார்கள். அந்தச் சமயத்தில் அவருடைய சீஷரில் இயேசுவுக்கு அன்பானவனாயிருந்த ஒருவன் இயேசுவின் மார்பிலே சாய்ந்துகொண்டிருந்தான். யாரைக்குறித்துச் சொல்லுகிறாரென்று விசாரிக்கும்படி சீமோன் பேதுரு அவனுக்குச் சைகைகாட்டினான். அப்பொழுது அவன் இயேசுவின் மார்பிலே சாய்ந்துகொண்டு: ஆண்டவரே, அவன் யார் என்றாhன். இயேசு பிரதியுத்தரமாக: நான் இந்தத் துணிக்கையைத் தோய்த்து எவனுக்குக் கொடுப்பேனோ, அவன்தான் என்று சொல்லி, துணிக்கையைத் தோய்த்து, சீமோன் குமாரனாகிய யூதாஸ்காரியோத்துக்குக் கொடுத்தார். அந்தத் துணிக்கையை அவன் வாங்கினபின்பு, சாத்தான் அவனுக்குள் புகுந்தான். அப்பொழுது இயேசு அவனை நோக்கி: நீ செய்கிறதைச் சீக்கிரமாய்ச் செய் என்றார் - யோவான் 13:21-27.

இந்த வசனங்கள் நம் அனைவரும் நன்கு அறிந்த ஒரு பகுதியாகும். கடைசி இராப்போஜனம் என்றும் ஆங்கிலத்தில் *The Last Supper* என்றும் அழைக்கப்படும் இந்தப்பகுதியை விதவிதமான சித்திரங்களாக வரைந்து எல்லா இடங்களிலும் வைத்திருக்கிறார்கள். இதை வைத்து *Da Vinci code* என்ற திரைப்படத்தை உருவாக்கி, பெரிய பணத்தை சம்பாதித்து, சத்துரு மகிழ்ந்தான். சரி, இந்த சித்திரத்தின் பிண்ணனியைப்

பார்த்தால் நம்மால் நம்ப முடியாத காரியங்கள் நடைபெற்றுள்ளன.

*The Last Supper* என்னும் சித்திரத்தை அல்லது ஓவியத்தை உண்டாக்கியவர் *Leonardo Da Vinci* என்னும் இத்தாலிய தலைச்சிறந்த ஓவியராவார். அந்த ஓவியத்தை அவர் செய்து முடிக்க 7 வருடங்களாயின. இயேசுகிறிஸ்துவும் அவரது 12 சீஷர்களும் உண்மையான மனிதர்களை மாடலாக வைத்து வரையப்பட்டனர்.

முதலாவது கிறிஸ்துவின் படத்தை வரைவதற்கு ஒரு மாடல் தேவைப்பட்டார். நூற்றுக்கணக்கான வாலிபர்கள் இதற்கென்று ஜாக்கிரதையாக தேடப்பட்டார்கள். அமைதியும் அன்பும் அழகும் நிறைந்த முகமாய், பாவத்தின் கறைகளினால் சேதப்பட்டிருக்காமல், ஒரு களங்கமில்லாத ஒரு முகத்தைத் தேடினார்கள். கடைசியில் அநேக வாரங்களுக்குப் பிறகு, 19 வயது நிரம்பிய ஒரு வாலிபனை கண்டுபிடித்தார்கள். அவனை வைத்து வின்சி, ஆறு மாதங்கள் விடாமல் தன் முழு ஆற்றலையும் செலுத்தி, இயேசுகிறிஸ்துவின் படத்தை வரைந்து முடித்தார்.

அதைத் தொடர்ந்து, அடுத்த ஆறு வருடங்கள், ஜாக்கிரதையாக மற்ற 11 சீஷர்களை தேர்ந்தெடுத்து, அவர்களையும் வரைந்து முடித்தார். அவர்களின் மத்தியில் ஒரு இடத்தை யூதாஸ்காரியோத்திற்காக விட்டு வைத்து, மற்ற சீஷர்களை வரைந்து முடித்தார். இப்போது யூதாஸ்காரியோத்தை வரைந்தால் அந்தப் படம் முடிவடைந்து விடும்.

இப்போது, யூதாஸ்காரியோத்தைத் தேடும் படலம் தொடங்கியது. டா வின்சி, இப்போது, மிகவும் கடுமையான, பாவமும் மாய்மாலமும் நிறைந்த, தன் அன்பு நண்பனை மறுதலித்து, காட்டிக் கொடுத்த, கொடூரமான முகத்திற்கான மாடலைத் தேடினார். அநேக வாரங்கள் தேடிய பிறகு, ரோம அரசின் பாதாள சிறையில் அவர் வேண்டியபடி, ஒரு மனிதன் கொலையும் குற்றங்களும் செய்து வாழ்நாள் முழுதும் சிறையில் இருக்கும்படி தண்டனை விதிக்கப்பட்ட நிலையில் இருப்பதாக செய்தி வந்தது.

உடனே அவர் அங்கு புறப்பட்டுச்சென்று அந்த மனிதனை, சூரிய வெளிச்சத்தில் பார்த்தபோது, அவன் முடிகள் சடை பிடித்ததாய் கொடுமை நிறைந்த முகத்தை அங்கு கண்டார். கடைசியில் அவருக்கு அவர் விரும்பியபடி யூதாஸ் காரியோத்திற்கு மாடலாக தகுதியான மனிதன் கிடைத்து, அந்த நாட்டு அரசனிடமிருந்து விசேஷித்த அனுமதிப் பெற்று, அந்த மனிதனை அவர் தன் அறைக்கு கொண்டு வந்து அவர் வரைய ஆரம்பித்தார்.

கடைசியாக, வரைந்து முடித்தப்பின் காவல்காரரிடம், 'சரி வரைந்து முடித்தாயிற்று. இவனை மீண்டும் சிறைக்கு கொண்டு போங்கள்' என்று கூறினார். அப்படி அந்தக் காவலர் அவனை சங்கிலிகளால் பிணைத்து கொண்டுப் போக முற்படும்போது அந்த மனிதன் திமிறி, டா வின்சியிடம் ஓடி வந்து, 'ஐயா என்னைத் தெரியவில்லையா?' என்றுக் கேட்டான். அதற்கு டா வின்சி, 'நான் உன்னைப் பார்த்ததே இல்லை, உன்னை அந்தச் சிறையில் தான் முதலில் பார்த்தேன்' என்றுக் கூறினார். அப்போது அந்த மனிதன் கண்களில் கண்ணீர் வழிய, 'ஐயா என்னை நன்றாக பாருங்கள். நான்தான் நீங்கள் ஏழு

வருடங்களுக்கு முன் கிறிஸ்துவுக்கு மாடலாக நின்ற மனிதன் என்றுக் கூறினான். டா வின்சி அப்படியே வாயடைத்து நின்றார்.

ஏழு வருடங்களுக்கு முன் களங்கமில்லாத பால் வடியும் முகத்துடன், கிறிஸ்துவுக்கு மாடலாக நின்ற அதே மனிதன், பாவம் அவன் உள்ளத்தில் வந்ததால், கொலையும் குற்றமும் செய்து, உலக சரித்திரத்திலேயே மோசமான ஒரு மனிதனுக்கு ஒப்பாக மாறிவிட்டான். பாவம் வரும்போது எத்தனை மாறுதல்கள்! பாவம் நம் முகச்சாயலை மாத்திரமல்ல, நம் வாழ்வையே அழித்துப் போடுகிறது. பாவத்திற்கு எதிர்த்து போராடுவோம். பாவம் செய்யாதபடி நம்மைக் காத்துக் கொள்வோம். சாத்தானின் முகச் சாயலும், அவனுடைய எந்த காரியமும் நம் வாழ்க்கையில் காணப்பட வேண்டாம்.

பால்வடியும் முகம் என்று கிறிஸ்துவுக்காக மாடலை அவர்கள் தேர்ந்தெடுத்தாலும், அவன் இருதயம் எத்தனை கறுப்பாக இருந்திருக்கிறது? மனுஷன் பார்க்கிறபடி நான் பாரேன்; மனுஷன் முகத்தைப் பார்ப்பான்; கர்த்தரோ இருதயத்தைப் பார்க்கிறார் என்றார் (1சாமு 16:7). நம் தேவன் நம் இருதயத்தைப் பார்க்கிற தேவனாயிருக்கிறார். நம் இருதயத்தில் கறையில்லாதவர்களாக காணப்படுவோம். பரிசுத்த வாழ்க்கை வாழ்வோம். அப்படிப்பட்டவர்களை கர்த்தர் ஆசீர்வதிப்பாராக! ஆமென் அல்லேலூயா!

இயேசுவைப் போல அழகுள்ளோர் யாரையும்
இப்பூவினில் இதுவரை கண்டதில்லை காண்பதுமில்லை
பூரண அழகுள்ளவரே

*பூவில் எந்தன் வாழ்க்கையதில் நீரே போதும்*
*வேறே வேண்டாம் எந்தன் அன்பர் இயேசுவே*
*மண்ணுக்காக மாணிக்கத்தை விட்டிட மாட்டேன்*

***ஜெபம்:*** *பூரண அழகுள்ள எங்கள் அன்பு நேசரே உம்மைத் துதிக்கிறோம். கர்த்தாவே உமக்கொப்பானவர் யார் தகப்பனே, வானத்திலும் பூமியிலும் உமக்கொப்பானவர் யாருமில்லை ஐயா. உம்மை துதிக்கிறோம், உம்மை புகழுகிறோம். மனிதர்களாகிய நாங்கள் பெலவீனமுள்ளவர்கள் தகப்பனே, எங்கள் முகம் எங்களை நல்லவர்கள் என்றுக் காட்டினாலும் எங்கள் இருதயத்திற்குள் இருக்கிற காரியங்களை நீரே அறிகிற தேவனாயிருக்கிறீர். நாங்கள் எங்கள் இருதயத்திலும் பரிசுத்தத்தைக் காத்துக் கொள்ள எங்களுக்கு கிருபைச் செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 7. பிளவுண்ட மலை

*என் மகிமை கடந்துபோகும்போது, நான் உன்னை அந்தக் கன்மலையின் வெடிப்பிலே வைத்து, நான் கடந்துபோகுமட்டும் என் கரத்தினால் உன்னை மூடுவேன் - யாத்திராகமம் 33:22.*

அகஸ்டஸ் டாப்லாடி என்னும் தேவ மனிதன், தனது 16ஆவது வயதில் இயேசுகிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டார். அவரது 16ஆவது வயதில், மாம்ஸ் மோரிஸ் என்னும் ஆத்ம பாரம் கொண்ட தெருவில் பிரசங்கம் செய்யும் ஊழியர் நடத்திய சிறுக் கூட்டத்தில் அவர் கலந்துக் கொண்டார். அந்த ஊழியர் எபேசியர் 2:13-ம் வசனத்திலிருந்து சத்தியத்தை பகிர்ந்துக் கொண்டார். முன்னே தூரமாயிருந்த நீங்கள் இப்பொழுது கிறிஸ்து இயேசுவுக்குள் கிறிஸ்துவின் இரத்தத்தினாலே சமீபமானீர்கள் என்னும் இந்த வார்த்தைகள் அவருக்குள் கிரியை செய்ய ஆரம்பித்தது. அவர் அப்போதே தம்மை கர்த்தருக்கு ஒப்புக் கொடுத்து, கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டார்.

சிலவருடங்கள் கழித்து, அவர் ஒரு சூறாவளிப் புயலில் சிக்கிக் கொண்டார். எங்கு பத்திரமாக இருப்பது என்று தெரியாத நிலையில், அங்கு ஒரு பாறையையும் அதில், ஒரு பிளவு இருப்பதையும் கண்டார். அந்தப் பிளவில் புயல் ஓயுமட்டும் தங்கி இருந்து, தப்பித்தார். தனக்கு அந்த புகலிடத்தைக் கொடுத்த தேவனை துதிக்கையில், கன்மலையான கிறிஸ்துவும, தமக்காக பிளக்கப்பட்ட அவரது சரீரமும் அவருடைய கண்முன் தோன்றியது. அங்கேதானே இந்தப் பாடலை எழுத ஆரம்பித்தார்.

பிளவுண்ட மலையே புகலிடம் ஈயுமே. இந்த நாளிலும் நாம் இந்தப் பாடலை பாடி நம் கன்மலையாகிய கிறிஸ்துவை நினைவு கூர்ந்து துதிக்கிறோம். நமக்கு ஒரு புகலிடம் உண்டு. நம் வேதனையில், நம் துன்பங்களில் நம்மை மறைத்து புயல் நீங்கும் வரை தம்முடைய கரத்தின் மறைவில் மறைத்து பாதுகாக்கும் தேவன் நமக்கு உண்டு.

கொடூரமானவர்களின் சீறல் மதிலை மோதியடிக்கிற பெரு வெள்ளத்தைப்போல் இருக்கையில், நீர் ஏழைக்குப் பெலனும், நெருக்கப்படுகிற எளியவனுக்குத் திடனும், பெருவெள்ளத்துக்குத் தப்பும் அடைக்கலமும், வெயிலுக்கு ஒதுங்கும் நிழலுமானீர் (ஏசாயா 25:4). ஆம் நம் தேவனே நமக்கு பெலனும், திடனும், அடைக்கலமும் கோட்டையுமானவர். அவரின் செட்டைகளின் நிழலிலே களிகூறுகிறோம். இந்தச் சீரைப் பெற்ற ஜனமாகிய நாம் எவ்வளவு பாக்கியம் பெற்றுள்ளோம்! ஆமென் அல்லேலூயா!

பிளவுண்ட மலையே புகலிடம் ஈயுமே
பக்கம் பட்ட காயமும் பாய்ந்த செந்நீர் வெள்ளமும்
பாவ தோஷம் யாவுமே நீக்கும்படி அருளும்

**ஜெபம்:** எங்கள் கன்மலையும் கோட்டையுமாகிய கர்த்தாவே, சத்துரு வெள்ளம் போல வரும் போது அவனுக்கு எதிராக கொடி ஏற்றுபவரே, உம்மைத் துதிக்கிறோம். பிளவுண்ட மலையாகிய இயேசு கிறிஸ்துவுக்குள் நாங்கள் அடைக்கலம் புகுந்துக் கொள்கிறோம். உம்முடைய நாமத்திற்கே மகிமை செலுத்துகிறோம். இயேசு கிறிஸ்துவின்

*நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 8. அவதூறு பேச வேண்டாம்

*துன்மார்க்கனை நீதிமானாக்குகிறவனும், நீதிமானைக் குற்றவாளியாக்குகிறவனுமாகிற இவ்விருவரும் கர்த்தருக்கு அருவருப்பானவர்கள் - நீதிமொழிகள் 17:15.*

ஒருபெண் தன் பக்கத்து வீட்டு பெண்ணை பற்றி அக்கம் பக்கத்தில் ஒரு புரளியை கிளப்பி விட்டாள். அது காட்டுத்தீயை போல அந்த ஊரே பரவி விட்டது. அந்த பக்கத்து வீட்டு பெண் வெளியே தலைகாட்ட முடியாதபடி அந்த விஷயத்திற்கு கை கால் வைத்து பெரிய விஷயமாக மாற்றி விட்டனர் ஊர்க்காரரர்கள். என்ன செய்வது என்று தெரியாமல் அந்த பெண் கண்ணீர் விட்டு அழுதாள். ஏன் என்னை பற்றி ஊரார் இப்படி பேசுகிறார்கள் என்று புரியாமல் தவித்தாள். கடைசியில் அந்த பெண் அந்த ஊரின் தலைமை மத போதகரிடம் சென்று காரியத்தை கூறிவிட்டு என்ன செய்வது என்று கேட்டாள். அதற்கு அவர் தான் இதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கப்போவதாக கூறி ஆறுதல் படுத்தி அனுப்பி விட்டார்.

பின் அவர் விசாரித்த போது, அது எங்கெங்கோ போய் கடைசியில் பக்கத்து வீட்டு பெண்ணில் போய் நின்றது. அந்த பெண்ணை கூப்பிட்டு, அவர் கையில் ஒரு பை நிறைய அரிசியை கொடுத்து, தான் இருக்கும் இடத்திலிருந்து அவள் வீடு வரை வழியெல்லாம் அதை போட்டு கொண்டு வர சொன்னார். பின் அடுத்த நாள் தன்னை பார்க்க வரவும் சொன்னார். அதன்படி அடுத்த நாள் அந்த பெண் அவரை பார்க்க சென்ற போது, அவர் அவளிடம், 'போய் நான் கொடுத்த அரிசியை வழியிலிருந்து பொறுக்கி கொண்டு வா' என்று கூறினார். அப்போது அவள் 'ஐயா நான் எப்படி அதை

போய் கொண்டு வருவது? இந்நேரம் அநேகர் மிதித்து, அது இருந்த இடம் கூட தெரியாதே, பறவைகள் கொத்தி கொண்டு போயிருக்குமே' என்று கூறினாள். அப்போது அவர் அவளிடம், 'ஆம், அப்படித்தான் நாம் சொல்கிற ஒவ்வொரு வார்த்தைகளும்! ஒரு முறை சொல்லி விட்டால், அதை பின் பொறுக்க முடியாது. மற்றவர்களை குறித்து அவதூறாக பேசாதே, புரளியை கிளப்பி விடாதே, நாளை உனக்கும் அதே நிலைதான் வரும், திரும்ப இந்த மாதிரி காரியத்தில் ஈடுபட்டால், உனக்கு தண்டனை கொடுக்கப்படும்' என்று எச்சரித்து அனுப்பினார்.

பிரியமானவர்களே, நம்மில் அநேகர் பிறரை குறித்து தேவையில்லாமல் மற்றவர்களிடம் கதை பேசுகிறோம். அது அவர்களுக்கு தெரிந்தால் எத்தனை வருத்தப்படுவார்கள் என்று நாம் அதை குறித்து நினைப்பதில்லை. எப்படியாவது மற்றவர்களிடம் அவர்களை குறித்து குறைவாக பேசினால் நமக்கு ஒரு மனசாந்தி கிடைக்கும் என்ற நம்பிக்கை. ஒரு வேளை நாம் பேசுகிறவர் தவறே செய்யாத பட்சத்தில் அவரை குறித்து அநியாயமாக குறை பேசுவது கர்த்தருக்கு அருவருப்பானது என்று வேதம் சொல்கிறது. 'துன்மார்க்கனை நீதிமானாக்குகிறவனும், நீதிமானைக் குற்றவாளியாக்குகிறவனுமாகிற இவ்விருவரும் கர்த்தருக்கு அருவருப்பானவர்கள்'.

யோபு தேவனை குறித்து எத்தனையோ காரியங்களை குறையாக சொன்னார். ஆனால் அவருடைய நண்பர்களோ கர்த்தரை புகழ்ந்து, அவருடைய குணாதிசயங்களை குறித்து நன்மையானவற்றையே பேசினார்கள். ஆனாலும் தேவனுக்கு யோபுவின் நண்பர்கள் மேல் கோபம் வந்தது. 'கர்த்தர் இந்த

வார்த்தைகளை யோபோடே பேசினபின், கர்த்தர் தேமானியனான எலிப்பாசை நோக்கி: உன்மேலும் உன் இரண்டு சிநேகிதர்மேலும் எனக்குக் கோபம் மூளுகிறது; என் தாசனாகிய யோபு பேசினதுபோல், நீங்கள் என்னைக்குறித்து நிதானமாய்ப் பேசவில்லை' (யோபு 42:7) என்று கூறினார். ஏன் அவர் அப்படி சொன்னார்?

ஏனெனில் யோபு நன்மை செய்திருக்க அவருடைய நண்பர்கள் அவர் செய்த பாவத்தினால்தான் அவருக்கு அந்த வியாதி வந்தது என்று அவரை குறித்து குறைவாக பேசினதினால்தான். தேவன் தம் பிள்ளைகளுக்காக எத்தனை வைராக்கியம் பாராட்டுகிறார் பாருங்கள்! 'ஆதலால் நீங்கள் ஏழு காளைகளையும், ஏழு ஆட்டுக்கடாக்களையும் தெரிந்துகொண்டு, என் தாசனாகிய யோபினிடத்தில் போய், உங்களுக்காகச் சர்வாங்க தகனபலிகளை இடுங்கள்; என் தாசனாகிய யோபும் உங்களுக்காக வேண்டுதல் செய்வான்; நான் அவன் முகத்தைப் பார்த்து, உங்களை உங்கள் புத்தியீனத்துக்குத் தக்கதாக நடத்தாதிருப்பேன்; என் தாசனாகிய யோபு பேசினதுபோல், நீங்கள் என்னைக்குறித்து நிதானமாய்ப் பேசவில்லை என்றார்' (யோபு 42:8). அவர் நீதிமான் என்று அழைத்தவர்களை குற்றவாளியாக தீர்ப்பது புத்தியீன செயல் என்று தேவன் சொல்கிறார். அவர்கள் கர்த்தருக்கு அருவருப்பானவர்கள் என்று வேதம் சொல்கிறது.

யோபு தேவனை குறித்து பேசினாலும், கர்த்தர் அவனிடம், 'சர்வவல்லவரோடே வழக்காடி அவருக்குப் புத்தி படிப்பிக்கிறவன் யார்? தேவன்பேரில் குற்றம் பிடிக்கிறவன் இவைகளுக்கு உத்தரவு சொல்லக்கடவன் என்றார். அப்பொழுது யோபு கர்த்தருக்குப் பிரதியுத்தரமாக: இதோ, நான் நீசன்; நான்

உமக்கு என்ன மறுஉத்தரவு சொல்லுவேன்; என் கையினால் என் வாயைப் பொத்திக்கொள்ளுகிறேன். நான் இரண்டொருதரம் பேசினேன்; இனி நான் பிரதியுத்தரம் கொடாமலும் பேசாமலும் இருப்பேன் என்றான்' (யோபு 40:2-5) என்று தேவனிடம் தன் குறையை சொல்லியபோது அவர் உடனே அவருக்கு அதை மன்னித்து விடுகிறார். அது அவருடைய ஞாபக புத்தகத்திலிருந்து உடனடியாக அழிக்கப்பட்டு போகிறது. நீதிமானாகிய தம் பிள்ளைகள் செய்த தவற்றை அவர்கள் அறிக்கையிட்டவுடன் அதை தேவன் மன்னித்து விடுகிறார். ஆனால் நீதிமானை குற்றவாளியாக பேசினவர்களின் தவறோ கர்த்தருக்கு கோபத்தை கொண்டு வருகிறது.

பிரியமானவர்களே, நாம் மற்றவர்களை குறித்து தேவையற்ற காரியங்களை பேச வேண்டிய அவசியமில்லை. அவர்கள் தவறு செய்யாத பட்சத்தில் நாம் கூறிய காரியங்கள் தேவனிடத்திலிருந்து கோபத்தை கொண்டு வரும். ஆகவே நாம் நம் வார்த்தைகளை குறித்து மிகவும் எச்சரிக்கையாயிருப்போம். 'மனுஷர் பேசும் வீணான வார்த்தைகள் யாவையும் குறித்து நியாயத்தீர்ப்பு நாளிலே கணக்கொப்புவிக்கவேண்டும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்' (மத்தேயு 12:36) என்று இயேசுகிறிஸ்து கூறினார். ஆகவே நாம் பேசும் ஒவ்வொரு வார்த்தையும் சுருக்கமாயும், மற்றவர்களை குறை சொல்லாததாயும், தேவையற்ற காரியங்களை குறித்து பேசாமலும் இருக்கட்டும். ஆமென் அல்லேலூயா!

சுத்தம் விரும்பும் சுத்த ஜோதியே
விரும்பா அசுத்தம் யாவும் போக்குமே
பாவி நீசப்பாவி நானையா
தேவா இரக்கம் செய்ய மாட்டீரோ

*பரிசுத்தர் கூட்டம் நடுவில்*
*ஜொலித்திடும் சுத்த ஜோதியே*
*அரூபியே இவ்வேளையில்*
*அடியார் நெஞ்சம் வாரீரோ*

**ஜெபம்:** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, எங்கள் நாவினால் நாங்கள் பாவம் செய்யாதபடி எங்கள் உதடுகளுக்கு காவல் வைத்தருளும். மற்றவர்களை புண்படுத்தும் வார்த்தைகளை நாங்கள் பேசாதபடி, தேவையற்ற கட்டு கதைகளை பேசி துக்கப்படுத்தாதபடி எங்கள் நாவை காத்தருளும். நீதிமானை குற்றப்படுத்துகிறவர்கள் கர்த்தருக்கு அருவருப்பானவர்கள் என்று வேதத்தில் பார்க்கிற நாங்கள் அப்படிப்பட்டதான காரியத்தை செய்யாதபடி எங்களை காத்தருளும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 9. காட்டிக் கொடுப்பவர்கள்

*அநேகர் இடறலடைந்து ஒருவரையொருவர் காட்டிக்கொடுத்து ஒருவரையொருவர் பகைப்பார்கள் - மத்தேயு 24:10.*

கி.மு. 492ஆம் ஆண்டு பெர்சியாவை அரசாண்ட மன்னன் தரியுவுக்கு தனது இராஜ்யபாரத்தை விரிவுப்படுத்த வேண்டுமென்ற ஆசை வந்தது. எனவே கிரேக்க நாட்டிலுள்ள அனைத்து பட்டணங்களுக்கும் தூதுவர்களை அனுப்பி, தரியு இராஜாவுக்கு கீழ்ப்படிகிறோம் என்பதை காண்பிக்கும் அடையாளமாக அந்தந்த பட்டணத்திலிருந்து தண்ணீரும் மணலும் கொடுத்தனுப்பும்படி சொல்லியனுப்பினான். தரியு இராஜாவின் வெற்றிகளையும் படை பலத்தையும் ஏற்கனவே கேள்விப்பட்டிருந்த கிரேக்க தேசத்திலுள்ள எல்லா பட்டணங்களும் தரியு இராஜாவிற்கு கீழ்ப்படிவதாக ஒப்புக்கொண்டனர்.

ஆனால் ஏதென்ஸ் பட்டணத்தார் தூதுவர்களாக வந்தவர்களை கொலை செய்தனர். எனவே தரியு அவர்களுக்கு விரோதமாக படைகளை அனுப்பினான். ஆனால் அவர்கள் தோற்றுப் போயினர். தன் படைகளை திரும்ப தரியு பெற்றான். அவன் இறந்தப்பிறகு அவனுடைய மகன் ஆட்சிக்கு வந்து மீண்டும் படைகளை அனுப்பி போராடினான். அவனிடம் இருபத்தைந்து இலட்சம் வீரர்களும், 1207 யுத்தக் கப்பல்களும் இருந்தன என்று சரித்திர ஆராய்ச்சியாளர்கள் எழுதுகின்றனர்

யுத்தம் ஆரம்பித்தது. கிரேக்கர்கள் அவர்களோடு கடுமையாக யுத்தம் மேற்கொண்டனர். இரண்டு நாள் யுத்தத்திற்கு பிறகு

எஃபியர்ட்டடஸ் என்பவன் பணத்திற்கு ஆசைப்பட்டு பட்டணத்திற்குள் வருவதற்கு இரண்டு மாற்று வழிகளை எதிரிகளுக்கு காட்டிக்கொடுத்து தனது சொந்த பட்டணத்திற்கே துரோகம் செய்தான். இதனால் பெரிசியர்கள் அந்த யுத்தத்தில் வெற்றிப் பெற்றனர்.

பணத்திற்காக காட்டிக்கொடுப்பது ஒன்றும் புதிதல்ல. யூதாஸ் முப்பது வெள்ளிக்காசுக்காக தனது எஜமானாராகிய இயேசுகிறிஸ்துவைவே காட்டிக் கொடுத்தான் அல்லவா? மூன்றரை வருடங்கள் அவருடன் கூடவே இருந்து அவருடைய கிருபையுள்ள வார்த்தைகளையும், பரலோக இராஜ்யத்தைக் குறித்த செய்திகளையும் கேட்டபோதும் அவனுடைய உள்ளத்தில் பண ஆசை இருந்தது. இயேசுகிறிஸ்து ஐசுவரியவான் பரலோகத்தில் செல்வது ஊசியின் காதில் ஒட்டகம் நுழைவதுப் போல கடினம் என்று சொல்லியும் அதை கேட்டும் அவன் மனம் மாறவில்லை. வெறும் முப்பது வெள்ளிக்காசுக்காக இரட்சகரை காட்டிக் கொடுத்தான். அவனுக்கு நியமிக்கப்பட்டிருந்த பரலோகத்தின் உயர்ந்த இடத்தை இழந்து போனான்.

கடைசி நாட்களிலும் இப்படிப்பட்ட காரியங்கள் நடக்கும் என்று இயேசுகிறிஸ்து ஒலிவ மலையின் மேல் அமர்ந்து தம் சீஷருக்கு கூறினார். அநேகர் இடறலடைந்து ஒருவரையொருவர் காட்டிக்கொடுத்து ஒருவரையொருவர் பகைப்பார்கள் என்று கூறினார். ஆகையால் அவைகளுக்கு நாம் தப்பும்படி கர்த்தருடைய இரகசிய வருகைக்கு ஆயத்தமாவோம். பரிசுத்தமாய் நம்மை காத்துக் கொள்வோம். கர்த்தர் சீக்கிரம் வருகிறார். ஆமென் அல்லேலூயா!

*காட்டிக் கொடுத்தான் முப்பது வெள்ளி*
*காசுக்காகவே கர்த்தர் இயேசுவை*
*கொலை செய்யவே கொண்டு போனாரே*
*கொல்கதா மலைக்கு இயேசுவை*

*பாவிக்கு புகலிடம் இயேசு இரட்சகர்*
*பாரினில் பலியாக மாண்டாரே*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, இயேசுகிறிஸ்துவோடே கூடவே இருந்தபோதும் பண ஆசையினிமித்தம் கர்த்தரை காட்டிக் கொடுத்த யூதாஸைப் போல் இன்றும் அநேகர் இருக்கிறார்களே தகப்பனே அவர்களிடமிருந்து எங்களை காத்தருளும். கடைசி நாட்களிலும் இப்படிப்பட்டவர்கள் இருக்கப் போகிறார்கள் என்று கிறிஸ்து எங்களை ஏற்கனவே எச்சரித்திருக்கிறபடியால் நாங்கள் இரகசிய வருகையில் எடுத்துக் கொள்ளப்படதக்கதாக பரிசுத்தமாக எங்களை காத்துக் கொள்ள கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

# 10. கர்த்தரின் பந்தி

நான் உங்களுக்கு செய்ததுப் போல நீங்களும் செய்யும்படி உங்களுக்கு மாதிரியை காண்பித்தேன் - யோவான் 13:15.

1912 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பத்தாம் தேதி டைட்டானிக் என்ற கப்பல் சவுத் ஹாம்டன் துறைமுகத்திலிருந்து புறப்பட்டது. அது தனது முதலாவது பயணத்திலேயே பனிப்பாறை ஒன்றின்மீது மோதி கவிழ்ந்ததில் 1500க்கும் மேற்பட்டவர்கள் கடலில் மூழ்கி இறந்தனர். அக்கோர சம்பவம் நடைபெற்று நூறு ஆண்டுகள் கடந்து விட்டதை நினைவுகூர விசேஷ நிகழ்ச்சி ஒன்று ஒழுங்கு செய்யப்பட்டது. டைட்டானிக் கப்பல் புறப்பட்ட அதே துறைமுகத்திலிருந்து எம். எஸ் பால் மோரால் என்ற கப்பல் 2012ஆம் ஆண்டு ஏப்ரல் 8ம்தேதி புறப்பட்டது. அதில் 1309 பிரயாணிக்ள பயணித்தனர். அவர்களில் அநேகர் டைடானிக் கப்பலில் பயணம் செய்து மரித்தவர்களின் வாரிசுகள், மற்றவர்கள் எழுத்தாளர்கள் மற்றும் சரித்திர ஆராய்ச்சியாளர்கள் ஆவார்கள்.

இக்கப்பலில் பயணித்த அனைவரும் 1912ஆம் ஆண்டு பிரயாணம் செய்தவர்கள் போன்று விதவிதமாக பாரம்பரிய உடைகள் அணிந்து வந்தது பார்க்க கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. அக்கப்பல் நியூயார்க் பட்டணத்தை சென்றடைய பன்னிரண்டு இரவுகள் எடுத்துக் கொண்டது. போகின்ற வழியில் டை;டானிக் கப்பல் மூழ்கிய அதே நாளில் அதே இடத்தில் கப்பல் சிறிது நேரம் நிறுத்தப்பட்டு ஒரு நினைவுநாள் ஆராதனையும் நடத்தப்பட்டது. இக்குழுவில் 28 நாடுகளை சேர்ந்தவர்கள் பங்குபெற்றனர்.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவும் தம்மை நினைவுகூரும்படி ஒரு காரியத்தை செய்ய சொன்னார். 'அப்பத்தை எடுத்து ஸ்தோததிரம் பண்ணி அதைப் பிட்டு நீங்கள் வாங்கி புசியுங்கள், இது உங்களுக்காக பிட்கப்படுகிற என்னுடைய சரீரமாயிருக்கிறது. என்னை நினைவுகூரும்படி இதை செய்யுங்கள் என்றார். போஜனம் பண்ணினபின்பு அவர் அந்தப்படியே பாத்திரத்தையும் எடுத்து இந்தப்பாத்திரம் என் இரத்த்தினாலாகிய புதிய உடன்படிக்கையாயிருக்கிறது. நீங்கள் இதை பானம் பண்ணும்போதெல்லாம் என்னை நினைவுகூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார்' (1 கொரிந்தியர் 11:23-25) என்று நாம் வாசிக்கிறோம்.

இயேசுகிறிஸ்துவின் சரீரம் நம் பாவங்களுக்காக பிட்கப்பட்டது என்றும் பாவமன்னிப்பிற்காக இரத்தம் சிந்தினார் என்றும் நினைவுகூரும் இவ்வாரதனையை சிலர் அசட்டை செய்து அதில் கலந்து கொள்வதில்லை. சிலர் அபாத்திரமாக கலந்து கொள்கிறார்கள். கிறிஸ்துவின் பாடுகளையும் மரணத்தையும் நினைவு கூர்ந்தவர்களாக, கிறிஸ்துவுடனே நம் உறவை புதுப்பித்துக் கொள்ள உதவும் இந்த இராப்போஜன ஆராதனையில் நாம் தருணம் கிடைக்கும் போதெல்லாம் கலந்து கொள்ள வேண்டும்.

ஒருவர் ஒரு நாட்டிலிருந்து மறு நாட்டிற்கு கடந்து செல்லும்போது மற்றவர்களிடம் என்னை நினைத்துக் கொள்ளுங்கள் என்று சொல்வது வழக்கம். அதுப்போல இயேசுகிறிஸ்துவும் பரலோகத்திற்கு செல்லுவதற்குமுன், நம்மிடம் என்னை நினைவுகூரும்படி இதை செய்யுங்கள் என்று சொல்லி சென்றாரே, அவரை நினைவுகூரும்படி நாம் இந்த பரிசுத்த பந்தியில் பரிசுத்தமாய் பங்கு பெறுவது எத்தனை

*அவசியம்! அப்படி பங்கு பெறுபவனை நான் கடைசி நாளில் எழுப்புவேன் என்று கர்த்தர் சொல்லியிருக்கிறார்.*

*அப்படி பாத்திரமாக பங்கு பெற்று நாம் உயிரோடு இருக்குமளவும் அவரையும், அவருடைய பாடு மரணத்தையும் நினைவுகூர்ந்தவர்களாக, பரிசுத்தமாக வாழ்ந்து, அவருடைய இராஜ்யத்திற்கு பாத்திரவான்களாக வாழ கர்த்தர் தாமே கிருபை செய்வாராக! ஆமென் அல்லேலூயா!*

*கர்த்தரின் பந்தியில் வா சகோதரா*
*கர்த்தரின் பந்தியில் வா*
*கர்த்தர் அன்பாய்ச் சொந்த ரத்தத்தைச் சிந்தின*
*காரணத்தை மனப் பூரணமாய் எண்ணி*

*ஜீவ அப்பம் அல்லோ?*
*கிறிஸ்துவின் திருச் சரீரம் அல்லோ?*
*பாவ மனங் கல்லோ?*
*உனக்காய்ப் பகிரப்பட்ட தல்லோ?*
*தேவ குமாரனின் ஜீவ அப்பத்தை நீ*
*தின்று அவருடன் என்றும் பிழைத்திட*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, கர்த்தருடைய பந்தியில் பாத்திரவான்களாகவும் அவருடைய மரணத்தை தெரிவிக்கிறவர்களாகவும், அவரை நினைவுகூர்ந்தவர்களாகவும் பங்கு பெற தேவன் கிருபை செய்வீராக. எங்களுக்கென்று பிட்கப்பட்ட அவருடைய சரீரத்தையும், எங்களுக்காக சிந்தப்பட்ட அவருடைய இரத்தத்தையும் நாங்கள் புசித்து பானம்பண்ணி, எல்லா பாவங்களும், சாபங்களும், வியாதிகளும்*

*நீங்கப்பெற்று சமாதானமாக வாழவும், கிறிஸ்துவின் வருகைக்கு ஆயத்தமானவர்களாகவும் ஜீவிக்க கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

# 11. நாவின் அதிகாரம்

*மரணமும் ஜீவனும் நாவின் அதிகாரத்திலிருக்கும்; அதில் பிரியப்படுகிறவர்கள் அதின் கனியைப் புசிப்பார்கள் - நீதிமொழிகள் 18:21.*

ஒரு சிறுவனுக்கு எப்போதும் அதிகக் கோபம் வரும் அவனுடைய தந்தை எத்தனையோ முறை அவனிடம் அது நல்லதல்ல என்றுச் சொல்லிப் பார்த்தார். அவனுக்கு கோபம் கட்டுப்படவே இல்லை. ஒரு நாள் அவன் தந்தை ஒரு பை நிறைய ஆணிகளையும் ஒரு சுத்தியையும் கொடுத்து, ஒவ்வொரு முறை கோபம் வரும்போதும், தங்கள் வீட்டிற்கு வெளியே வெள்ளைச் சாயம் போட்ட கட்டை வேலியின் மீது, ஒரு ஆணியை அடிக்கச்சொன்னார். அதன்படி, அவன் அடித்துபோது, முதல் நாளில் 37 ஆணிகளை அடித்தான்.

அடுத்த சில வாரங்களில், அவன் கோபம் குறையத் தொடங்கியது. ஏனெனில் ஒவ்வொரு முறை கோபம் வரும்போதும், வெளியேப் போய் ஆணிகளை அடிப்பதற்கு பதிலாக, கோபத்தை கட்டுபடுத்துவது அவனுக்கு எளியதாக கண்டது. அதை அவன் தகப்பன் கண்டபோது, அவனிடம் ஒவ்வொரு நாளும்போய் அவன் அடித்த ஆணிகளை பிடுங்கச் சொன்னார். அவன் அப்படியே எல்லாவற்றையும் பிடுங்கி முடித்தான்.

அன்று சாயங்காலம் அவன் தந்தை அவனது கையைப் பிடித்து அவனைக் கூட்டிக் கொண்டுப் போய், மகனே, நீ செய்தக் காரியம் நல்லது, ஆனால்பார், நீ ஆணி அடித்த இடத்தை, இந்த அழகிய வேலி இனி அப்படி இருக்கப் போவது

இல்லை. நீ ஆணியடித்ததினால் ஏற்பட்ட துளைகளைப் பார், அது துளைகளோடு காட்சியளிக்கிறது. அப்படித்தான் நீ அன்புகூருகிற ஒருவரிடம், நீ கோபத்தோடு பேசிய ஒவ்வொரு வார்த்தையும், இந்த துளைகளைப் போல், இருதயத்தில் மாறாத வடுகளை ஏற்படுத்துகிறது. நீ கோபம் போன பிறகு எத்தனை முறை மன்னிப்புக் கேட்டாலும் அந்த வடுக்கள் மாறாமல் அப்படியேதான் இருக்கும், ஆகவே கோபத்தைக் குறைத்து கோபமான வார்த்தைகளை பேசாதபடிக் காத்துக் கொள் என்று அவனுக்கு அறிவுரைக் கூறினார்.

நாவை அடக்க ஒரு மனுஷனாலும் கூடாது; அது அடங்காத பொல்லாங்குள்ளதும் சாவுக்கேதுவான விஷம் நிறைந்ததுமாயிருக்கிறது. அதினாலே நாம் பிதாவாகிய தேவனைத் துதிக்கிறோம்; தேவனுடைய சாயலின்படி உண்டாக்கப்பட்ட மனுஷரை அதினாலேயே சபிக்கிறோம்.(யாக்கோபு 3:8-9) என்று வேதம் கூறுகிறது. ஆனால் இயேசுகிறிஸ்துவை சொந்தமாகக் கொண்ட ஜனம் நாவை அடக்கிக் கொள்ள பழக வேண்டும். தேவன் கொடுத்த நாவை மற்றவர்களை உற்சாகப்படுத்தவும், திடனற்றவர்களை தேற்றவும், தேவனை துதிக்கவும் பயன்படுத்த வேண்டும்.

இனிய நாவு எலும்பையும் நொறுக்கும் என்று நீதிமொழிகள் 25:15ம் வசனத்தின் பின்பகுதியில் காணலாம். மற்றவர்களுக்கு பயன்படும் வார்த்தைகளையே பேசுவோம். மட்டுமல்ல, மரணமும் ஜீவனும் நாவின் அதிகாரத்திலிருக்கும்; அதில் பிரியப்படுகிறவர்கள் அதின் கனியைப் புசிப்பார்கள் என்ற வேதம் நமக்கு கூறுகிறது. நாம் எதை பேசுகிறோமோ, அதன்படிதான் நடக்கும். நாம் மரணத்துக்கு ஏதுவான வார்த்தைகளை பேசினால், அதன் கனியைப் புசிப்போம்.

*ஜீவனுக்கேதுவான் வார்த்தைகளை பேசினால் ஜீவனைப் பெறுவோம்.*

*உதாரணமாக, சங்கீதம் 23:6ல் என் ஜீவனுள்ள நாளெல்லாம் நன்மையும் கிருபையும் என்னைத் தொடரும்| என்று பார்க்கிறோம். அதைக் கூறுவதை விட்டுவிட்டு, என் தந்தைக்கு அல்லது தாய்க்கு இரத்த அழுத்த வியாதி இருக்கிறது, அல்லது சர்க்கரை வியாதி இருக்கிறது அதனால் என்னையும் அது தொடரும் என்று நம் வாயினால் அறிக்கை செய்வது மரணத்துக்கேதுவான வார்த்தைகளைப பேசுவதுப் போலாகும். அதற்கு பதிலாக, டயபடீஸோ, அல்லது ஹைபர் டென்ஷனோ அல்ல, நன்மையும் கிருபையுமே என்னைத் தொடரும் என்று அறிக்கை செய்வது, ஜீவனுக்கேதுவான வார்த்தைகளைப் பேசுவதுப் போலாகும். இன்று வரை எங்கள் குடும்ப ஜெபத்தில், எங்கள் ஜெபங்கள் முடிந்தப் பிறகு நாங்கள் குடும்பமாக, 23ம் சங்கீதத்தை விசுவாச அறிக்கையாக சொல்லித்தான் முடிப்போம். ஆந்த அதிகாரத்தின் ஒவ்வொரு வார்;த்தைகளும் அற்புதமானது. எங்கள் அறிக்கைக் கேட்டு தேவன் எங்களை ஆசீர்வதிககிறார். நீங்களும் அப்படி செய்யலாமே!*

*ஆகவே, நல்ல வார்த்தைகளைப் பேசுவோம், விசுவாச வார்த்தைகளைப் பேசுவோம், மற்றவர்களுக்கு ஆறுதலை தேறுதலைக் கொண்டு வருவோம். அதற்காகவே தேவன் நாவைப் படைத்தார் என்று விசுவாசிப்போம் கர்த்தர் நம்மை ஆசீர்வதிப்பாராக. ஆமென் அல்லேலூயா!*

*நன்றியால் துதிப் பாடு உன் இயேசுவை*
*நாவாலே என்றும் பாடு*

*நல்லவர் வல்லவர் போதுமானவர்*
*வார்த்தையில் உண்மையுள்ளவர்*

***ஜெபம்:*** *எங்களை நேசிக்கிற எங்கள் நல்ல தகப்பனே, எங்கள் நாவினால் நாங்கள் பாவம் செய்யாதபடி, எங்கள் நாவுகளைக் காத்துக் கொள்ள எங்க்ளுக்கு உதவி செய்யும். அவிசுவாசமான வார்த்தைகளை பேசாதபடி, விசுவாசமான வார்த்தைகளை பேசி, அதன் கனியை புசிக்க எங்களுக்கு கிருபைச் செய்யும். மற்றவர்களை பாதிக்கிற, விசனப்பட வைக்கிற வார்த்தைகளை பேசாதபடி ஒவ்வொரு நாளும் எங்களைக் காத்துக் கொள்ளும். இந்த நாவினால், உம்மைத் துதிக்கிறவர்களாக நன்றியால் எப்போதும் நாங்கள் நிறைந்தவர்களாக பாடிக் கொண்டிருக்க கிருபைச் செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# *12.* உதவி வரும் கன்மலை

*எனக்கு ஒத்தாசை வரும் பர்வதங்களுக்கு நேராக என் கண்களை ஏறெடுக்கிறேன். வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தரிடத்திலிருந்து எனக்கு ஒத்தாசை வரும் - சங்கீதம் 121:1-2.*

*ஒரு பெண் கம்பியூட்டரில் வேலை செய்பவர்கள் தன் கண் வலிக்கிறது என்று கண்மருத்துவரிடம் சென்றார்கள். அவர் பரிசோதனை செய்துவிட்டு, 'உங்கள் கண்கள் மிகவும் களைப்பாக இருக்கிறது, அவைகளுக்கு ஓய்வுதேவை' என்று சொன்னார். 'ஆனால் நான் அப்படி ஓய்வெடுக்க முடியாதே, என் வேலை கம்பியூட்டரில் இருப்பதால் நான் அடிக்கடி ஓய்வெடுக்க முடியாதே' என்றார்கள்.*

*கொஞ்சநேரம் அந்த மருத்துவர் யோசித்து 'நீங்கள் வேலை செய்யும் இடத்தில் ஏதாவது ஜன்னல் இருக்கிறதா?' என்று கேட்டார். அதற்கு அவர்கள் 'ஆம், எனக்கு முன்பாக இருக்கிற ஜன்னலிலிருந்து பசுமை போர்த்திய மலைகளை பார்க்கமுடியும், பின்பக்க ஜன்னலிலிருந்தும் அப்படிப்பட்ட அழகான மலையின் குன்றுகள் தெரியும்' என்று கூறினார்கள்.*

*அந்த மருத்துவர் சொன்னார், 'அதுதான் உங்களுக்கு தேவையானது. உங்கள் கண்கள் களைப்பாகும்போது, பத்து நிமிடங்கள் அல்லது இருபது நிமிடங்கள் அந்த மலைகளைப் பாருங்கள். தூரத்தில் நீங்கள் பார்க்கும் பார்வை உங்கள் கண்களின் களைப்பை போக்கும்' என்றார்.*

இது எந்த அளவு நாம் வாழும் இந்த உலகத்திற்கு பொருந்துமோ அதுப்போல ஆவிக்குரிய வாழ்விற்கும் பொருந்தும். நாம் ஒவ்வொரு நாளும் சந்திக்கும் பிரச்சனைகளினாலும், போராட்டங்களினாலும் நம் ஆத்துமா சோர்ந்து போகும்போது, மேலே நோக்கி பார்க்கும்போது, அதாவது உதவி வரும் கன்மைலையை நோக்கி பார்க்கும்போது நமக்கு உதவி வருவதோடு, நம்முடைய ஆத்துமாவுக்கும் இளைப்பாறுதல் கிடைக்கும்.

நமக்கு வரும் சோர்வுகள் மத்தியில் நாம் ஜெபத்தினாலும், வேத வாசிப்பினாலும் கர்த்தரை நோக்கி பார்க்கும்போது, அவர் நமக்கு புதிய பெலனை கொடுப்பதோடு, பிரச்சனைகளுக்கு முடிவும் கொண்டு வருவார். நம் பிரச்சனைகளில் உதவி வரும் கன்மலையாகிய கிறிஸ்துவையே நோக்கிப் பார்ப்போம். நம் ஆத்துமாக்களுக்கு இளைப்பாறுதல் உண்டாகும். ஆமென் அல்லேலூயா!

உதவி வரும் கன்மலை
நோக்கி பார்க்கின்றேன்
வானமும் வையமும் படைத்தவரை
நான் பார்க்கின்றேன்

காலை தள்ளாடவிடமாட்டார் என்னை
காக்கும் தேவன் உறங்கமாட்டார்
இஸ்ரவேலை காக்கிறவர்
எந்நாளும் தூங்க மாட்டார்

**ஜெபம்:** எங்களை நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, எங்களுக்கு உதவி வரும் கன்மலையாக நீர் இருப்பதற்காக உம்மை துதிக்கிறோம். வருத்தப்பட்டு பாரம் சுமக்கிறவர்களே, நீங்கள் என்னிடத்தில் வாருங்கள், நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன் என்று சொன்னவரே, எங்கள் ஆத்துமா சோர்ந்து போகும்போது உம்மிடததில் வருகிறோம், நீரே எங்களுக்கும் எங்கள் ஆத்துமாக்களுக்கும் இளைப்பாறுதல் தருவீராக. இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

# 13. இரத்தம் ஜெயம்

*குமாரனாகிய அவருக்குள், அவருடைய இரத்தத்தினாலே, பாவமன்னிப்பாகிய மீட்பு நமக்கு உண்டாயிருக்கிறது - கொலோசேயர் 1:14.*

பிரிட்டிஷ் நாட்டு போர் வீரர்கள் தங்கள் எதிரிகளோடு போராடும்போது, அதிகமான துப்பாக்கி, பீரங்கி சுடுதலினால் அதிகமாக காயமுற்றனர். அவர்களுடைய புண்கள் பெரிதாக இருந்தபடியால் அவர்களால் எழுந்தரிக்கவும் முடியவில்லை. எதிரிகளை எதிர்த்து போராட முடியாமல் தவித்தனர். அதனால் அவர்கள் தீர்மானித்தார்கள், ஒரு செஞ்சிலுவை சின்னத்தை காட்டினால் எதிரிகள் போரை சற்று ஓயச்செய்வார்கள் என்று. ஆனால் அவர்களிடம் ஒரு வெள்ளை துணி மாத்திரமே இருந்தது. சிவப்பு பெயிண்ட் இல்லை.

ஆகையால் தங்கள் புண்களிலிருந்து வழிந்த இரத்தத்தினால் ஒரு பெரிய சிலுவையை வரைந்து தங்கள் எதிரிகளிடம் காண்பித்தார்கள். அந்த எதிரிகளும் அதைக்கண்டு நிலைமையை உணர்ந்து, போரை நிறுத்தினார்கள். இந்த காயப்பட்ட வீரர்கள் பாதுகாப்பான இடத்தற்கு அழைத்து செல்லப்பட்டு சிகிச்சை பெற்றார்கள்.

கல்வாரியில் இயேசுகிறிஸ்து சிந்திய இரத்தத்திற்கு எதிரி பயப்படுவது மாத்திரமல்ல, அதை காணும்போது அவன் உதவியற்று போகிறான். இயேசுகிறிஸ்துவின் இரத்தத்திற்கு வல்லமை உண்டு. அவருடைய இரத்தம் நம் பாவங்கள் அனைத்தையும் மன்னித்து, கழுவுவது மாத்திரமல்ல, சத்துருவின் எந்த பிடியையும் நம்மை விட்டு அகற்றிப் போடும்.

சத்துருவின் எல்லா குற்றச்சாட்டுகளிலிருந்தும் நமக்கு பாதுகாப்பை தருவது இயேசுகிறிஸ்துவின் இரத்தம். எதிரியை துரத்தி அதிகாரத்தை நமக்கு தருவது கிறிஸ்துவின் இரத்தம். நமக்கு சுகத்தை தருவது இயேசுகிறிஸ்துவின் இரத்தம். நமக்காக பரிந்து பேசுவது இயேசுகிறிஸ்துவின் இரத்தம். நம்மை நீதிமானாக்கி, நித்திய ஜீவனை தருவதும் கிறிஸ்துவின் இரத்தமே. சாபங்களை நீக்கி, நம்மை பரிசுத்தப்படுத்துவதும் கிறிஸ்துவின் இரத்தமே.

இந்த நாள் வரை நம் வீட்டை சுற்றி கிறிஸ்துவின் இரத்தம் தெளிக்கப்பட்டு, நமக்கு பாதுகாப்பை கொடுப்பதோடு, எதிரிகளோ சங்கார தூதனோ நுழையாதபடி காப்பதும் இயேசுகிறிஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தமே. அந்த இரத்தத்தில் நமக்கு ஜெயம் உண்டு. வல்லமை உண்டு. அல்லேலூயா!

இயேசுவின் குற்றமற்ற இரத்தத்தை காணும்போது சாத்தான் பயந்து நடுங்குவான். ஓடிப்போவான். அதற்கு முன் நிற்க அவனுக்கு பெலனில்லை. அந்த வல்லமையுள்ள, விலையேறப்பெற்ற, மாசில்லாத இரத்தத்தை நமக்காக சிந்தி நம்மை இரட்சித்த கிறிஸ்துவை மகிமைப்படுத்துவோம். அவருடைய இரத்தத்திற்குள் மறைந்து கொள்வோம். எந்த தீங்கும் நம்மை தீண்டாது. ஆமென் அல்லேலூயா!

இரத்தத்தில் மறைந்துள்ளேன் - இயேசு
இரத்தத்தில் மறைந்துள்ளேன் - தூய
இரத்தத்தில் மறைந்துள்ளேன்
எத்தீங்கும் என்னை நெருங்காது

*தீங்கில்லை தீங்கில்லை தீங்கில்லை*
*சாத்தான் தீமை செய்ய முடியாது*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே இயேசுகிறிஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தத்திற்காக துதிக்கிறோம். எங்களுக்காக பாவமில்லாத அவருடைய இரத்தம் சிந்தப்பட்டதே! இந்த இரத்தத்தில் இருக்கும் வல்லமைக்காக நன்றி. நாங்கள் அந்த இரத்தத்தால் கழுவப்பட்டு, அதன் வல்லமையால் சத்துருவை ஜெயிக்க நீர் பாராட்டி இருக்கிற கிருபைக்காக நன்றி செலுத்துகிறோம். எங்கள் துதி ஸ்தோத்திரங்களை இயேசுகிறிஸ்துவின் மூலமாக உமக்கே செலுத்துகிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

## 14. சிற்பங்கள்

*பிள்ளைகளே, நீங்கள் விக்கிரகங்களுக்கு விலகி, உங்களைக் காத்துக்கொள்வீர்களாக. ஆமென் - 1 யோவான் - 5:21.*

இயேசு கிறிஸ்து இந்த பூமியில் அவதரித்து வந்த நாட்களில் ரோம சாம்ராஜ்யம் உலகெங்கும் பரவி இருந்தது. இந்த ரோமர்களின் சிறப்பம்சம் என்னவென்றால், இவர்கள் சகல கலைகளிலும் தேறினவர்கள். குறிப்பாக சிற்பக்கலையில் மிகத் தேறினவர்களாக இருந்தார்கள். இன்றைய புதைபொருள் ஆராய்ச்சியில் கண்டுபிடிக்கப்பட்ட ரோம மன்னர்களின் சிலைகளை நாம் பார்போமானால் அது நம்மை அசர வைப்பதாக இருக்கும். ஒரு நபரை அப்படியே துல்லியமாக சிலை வடிப்பதில் இவர்களுக்கு நிகர் இவர்களே. பளிங்கு கற்களில் ஒரு முகத்தை செதுக்கினார்களானால் கண்களின் மேலுள்ள புருவத்தை முடிகள் போலவே தத்ரூபமாக செதுக்கும் திறன் வாய்ந்தவர்கள். அந்நாட்களில் வாழ்ந்த அத்தனை மன்னர்களின் சிலையும் இவர்களால் செதுக்கப்பட்டிருந்தன.

ஆனால் ஒரு ஆச்சரியமான விஷயத்தை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் வாழ்ந்தார், மரித்தார், உயிர்த்தெழுந்தார், பரத்திற்கு சென்றார். அவரை ஆயிரக்கணக்கான மக்கள் நேராகப் பார்த்திருந்தனர். சீஷர்கள் அவரைக் குறித்து சுவிசேஷங்களை எழுதினார்கள். மத்தேயு எழுதின சுவிசேஷம், மாற்கு எழுதின சுவிசேஷம், லூக்கா எழுதின சுவிசேஷம், என்று வாசிக்கிறோம். ஆனால் இன்னார் வரைந்த இயேசுவின் ஓவியம் அல்லது இன்னார் செதுக்கிய இயேசுவின் சிற்பம் என்று எந்த உருவமோ, சிற்பமோ உருவாக்கப்படவிலலை. ஏன்? அப்போஸ்தலர்களுக்குத்

தெரியும். ஒருவேளை அவர் எப்படியிருந்தார் என்று ஒரு சிற்பத்தை உருவாக்கினால் மக்கள் நாளடைவில் அதை ஒரு வணக்கத்திற்குரிய விக்கிரகமாக மாற்றி விடுவர் என்று நன்றாக அறிந்திருந்தனர். ஆகவே அப்படிப்பட்ட ஒரு தவறை அப்போஸ்தலர்களோ, ஆதித்திருச்சபையோ, விசுவாசிகளோ செய்ய வில்லை.

இதிலிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய காரியமென்ன? இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் வாழும் போது எப்படி இருந்தார் என்ற எந்தவித சரித்திர ஆதாரங்களும் நமக்குக் கொடுக்கப்படவில்லை. ஏன்? அது நமக்குத் தேவையும் இல்லை. இன்று அவர் பிதாவின் வலது பாரிசத்திலே மகிமையாய் வீற்றிருக்கிறார். அவரை தரிசனத்தில் கண்ட யோவான் மரித்தவனைப் போல விழுந்தான் என்று எழுதப்பட்டுள்ளது. ஏற்கனவே மிகவும் அன்பு வைத்திருந்த ஒருவரை பார்த்தவுடன் ஏன் ஒருவன் மரித்தவனைப் போலாக வேண்டும். இது ஒரு ஆச்சரியமான விஷயம். ஏனென்றால் அவருடைய ரூபம் யோவான் முன்பு பார்த்ததுப் போல அல்லாமல் மகிமையாக விளங்கியது. அவரால் அடையாளம் கண்டுகொள்ள முடியாத அளவு இயேசுவின் முகம் மகிமையோடு இருந்தது.அப்படிப்பட்டவரை ஒரு படமாகவோ, அல்லது சொரூபமாகவோ நம் வீட்டில் வைத்துள்ளோமா? அவைகளை உங்கள் வீட்டை விட்டு அகற்றி விடுங்கள்.

ஒருவேளை சிறுபிள்ளைகளுக்கு இயேசுவின் செயல்களை விளக்க ஞாயிறு பள்ளியில் படங்களை காட்டுவதில் தவறில்லை. இயேசு திரைப்படத்தில் ஒரு மனிதன் நடித்து அவர் வாழ்வை விளக்குவதிலும் தவறில்லை. ஆனால் அவரது படங்களை மற்ற மதத்தினரைப் போல நாமும் வீட்டில் வைத்திருப்போமானால்

*அது தவறே. உதாரணத்திற்கு திரைப்படத்தில் நடித்த அந்த மனிதனை அதன்பிறகு ஒரு தெய்வமாக வணங்குவதும், அந்த மனிதனுடைய படத்தை வீட்டில் வைத்து வைப்பதும் தவறே. ஒருவேளை நாம் அதை வணங்காவிட்டாலும், நம் வீட்டிற்கு வரும் மற்றவர்கள் அதை வணங்கினாலும் அது நமக்கு பாவமே. ஆகவே தேவனை ஆவியோடும், உண்மையோடும் தொழுது கொள்வோம். விக்கிரகங்களை விலக்கி நம்மைக் காத்துக் கொள்வோம். ஆமென் அல்லேலூயா!*

*ஆவியான தேவனுக்கு ரூபமொன்றுமில்லையே*
*ரூபமில்லை ஆகையால் சொரூபமொன்றுமில்லையே*
*வாஞ்சையுள்ள ஆத்துமாவின் இருதயந் தன்னிலே*
*வார்த்தையாலே பேசுகின்ற ஆண்டவர் இவர்*

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசிக்கும் எங்கள் நல்ல தகப்பனே, உம்மை துதிக்கிறோம். ஆவியாய் இருக்கிற உம்மை ஆவியோடும் உண்மையோடும் தொழுது கொள்ளவும், ஆவியிலே நிறைந்து உம்மை தொழுது கொள்ளவும் கிருபை செய்யும். ஆவியாயிருக்கிற தேவனை சிற்பங்களை வைத்து உருவகபடுத்தாமல் உண்மையாய் தொழுது கொள்ள கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# *15.* சிலுவை சுமக்கும் அனுபவம்

*பின்பு இயேசுகிறிஸ்து எல்லாரையும் நோக்கி: ஒருவன் என் பின்னே வர விரும்பினால் அவன் தன்னைத்தான் வெறுத்து, தன் சிலுவையை அநுதினமும் எடுத்துக் கொண்டு, என்னைப் பின்பற்றக்கடவன் - லூக்கா 9:23.*

*இந்நாட்களில் சிலுவை என்பதற்கு அதன் அர்த்தமே அநேகருக்கு தெரியாமற் போய் விட்டது. டீவியில் ஆங்கில பாடல்கள் என்று எந்தெந்த அர்த்தத்திலோ பாடல்கள் பாடுபவர்கள் கழுத்தில் சிலுவையை அணிந்து கொண்டிருக்கிறார்கள். ஒரு முறை ஒரு ஊழியக்காரர் சொன்னார், 'அவர்கள் அணிந்து கொண்டிருப்பது இயேசுவின் சிலுவை என்று யார் சொன்னார்கள்? அவர்கள் அணிந்திருப்பது இயேசுவின் பக்கத்தில் தொங்கி கொண்டிருந்த திருடனின் சிலுவையாக்கும்' என்று கூறினார்.*

*சிலுவையை இந்நாட்களில் யாரும் பார்க்கும்போது அது கிறிஸ்தவர்களை அவர்களுடைய நம்பிக்கையை குறிக்கிறதாக காணப்படுகிறது. இயேசுகிறிஸ்து மேலே சொல்லப்பட்ட வார்த்தைகளை சொன்னபோது அவர் இன்னும் சிலுவையில் அறையப்படவில்லை. இந்த இடத்தில் அவர் இந்த வார்த்தைகளை சொன்னபோது, சிலுவை என்பது ரோமர்களால் மிகவும் கொடூரமான முறையில் தவறு செய்தவர்களை கொல்லும் ஒரு முறையாக இருந்தது. மிகவும் சித்திரவதை செய்யப்பட்டு, நீண்ட நேரம் சிலுவையில் தொங்கப்பட்டு மரிக்கும் முறையே இந்த சிலுவையில் அறையப்படுதலாகும்.*

சிலுவை மரணம் அப்படிப்பட்டதாக இருக்கும்போது இயேசுகிறிஸ்து தம்மை பின்பற்றி வருகிறவர்கள் தன்னை தான் வெறுத்து தன் சிலுவையை அனுதினமும் எடுத்து கொண்டு பின்பற்றி வரச் சொன்னார்? தம்மை பின்பற்றி வருவது என்பது மிகவும் எளிதான காரியம் அல்ல என்பதை விளக்கவே அவர் அப்படி கூறினார். ஆம், இயேசுகிறிஸ்து நம் பாவங்களை மன்னித்து இரட்சிப்பை கொடுப்பது முற்றிலும் இலவசமே! ஆனால் அவரை பின்பற்றி, பாவமில்லாமல் பரிசுத்தமாய் அவருடைய கற்பனைகளுக்கு பின்பற்றி வருவது என்பது எளிதான காரியம் அல்ல! அதனால்தான் அவர் தன்னை பின்பற்றி வருபவர்கள் தன்னைத்தான் வெறுக்க வேண்டும், பின் தன் சிலுவையை எடுத்து கொண்டு பின்பற்ற வேண்டும் என்று கூறினார்.

இந்நாட்களில் சிலர் சொல்வார்கள், என் வயதான பெற்றோரே எனக்கு சிலுவை அல்லது, என் பிள்ளைகளே எனக்கு சிலுவை அல்லது குடித்து வெறித்து, என்னை தினமும் அடிக்கிற கணவனே எனக்கு சிலுவை என்று விதவிதமாக தாங்கள் அனுபவிக்கிற பாடுகளை குறித்து சொல்வார்கள். ஆனால், சிலுவை சுமப்பது என்பதன் உண்மை அர்த்தம் என்ன?.

- ❖ சிலுவை சுமப்பது என்றால் மற்றவர்கள் செய்த குற்றத்தை மன்னிப்பது, உள்ளத்தில் அதை வைத்து கொண்டு வன்மம் தீர்ப்பது அல்ல.

- ❖ சிலுவை சுமப்பது என்பது மற்றவர்கள் சாதாரணமாக செய்யும் பாவ காரியங்களை செய்யாமல், நம்மை ஈடுபடுத்தாமல் அந்த சோதனையிலிருந்து நம்மை பாதுகாத்து கொள்வது.

- ❖ சிலுவை சுமப்பது என்பது தங்கள் கணவருக்கோ, மனைவிக்கோ துரோகம் செய்யாமல் உண்மையாக இருப்பது.

- ❖ சிலுவை சுமப்பது என்பது தூக்க நேரத்தை தியாகமாய் விட்டு ஜெபிப்பது.

- ❖ சிலுவை சுமப்பது என்பது நம்முடைய சித்தத்தை செய்யாமல் தேவனுடைய சித்தத்தை நம் வாழ்வில் நிறைவேற்றுவது.

- ❖ சிலுவை சுமப்பது என்பது நாம் களைப்பாய் இருந்தாலும் யாராவது உதவி என்று அழைக்கும்போது மனமுவந்து உதவி செய்வது.

- ❖ சிலுவை சுமப்பது என்பது மற்றவர்கள் நம்மை தேவையில்லாமல் தூற்றும்போது அவர்களுக்கு பதிலுக்கு பதில் கொடுக்காமல் கர்த்தருடைய கரத்தில் விட்டுவிடுவது.

- ❖ சிலுவை சுமப்பது என்பது பிறர் நமக்கு செய்த துர்க்காரியத்திற்கு பதில் துர்க்காரியம் செய்யாமல் இருப்பது.

- ❖ சிலுவை சுமப்பது என்பது அநியாயமாய் நம்மேல் குற்றம் சாட்டும்போது பொறுமையாக சகிப்பது

பிரியமானவர்களே, இப்படி நாம் நம் சிலுவையை சுமப்போமானால் அந்த சிலுவை நமக்கு பாரமாக ஒரு போதும் இருக்காது. அதற்கு பதில் அது நமக்கு சந்தோஷமாகவும், களிப்பாகவும் மாறிவிடும். கழுத்தில் அணிந்து சிலுவை சுமப்பது உண்மையாக சுமப்பதல்ல, மேற்கண்ட காரியங்களை செய்து சிலுவை சுமக்கும்போது, அதாவது நாம் நம்மை வெறுத்து, பின்,

*அனுதினமும் இந்த காரியங்களை செய்து, கிறிஸ்துவை பின்பற்றும்போது கிறிஸ்துவுக்கு உண்மையான சீடர்களாக இருப்போம். அப்போது அப்போஸ்தலனாகிய பவுலோடு சேர்ந்து நாமும் 'கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையிலறையப்பட்டேன்; ஆயினும், பிழைத்திருக்கிறேன்; இனி நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்; நான் இப்பொழுது மாம்சத்தில் பிழைத்திருக்கிறதோ, என்னில் அன்புகூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்த தேவனுடைய குமாரனைப்பற்றும் விசவாசத்தினாலே பிழைத்திருக்கிறேன்' (கலாத்தியர் 2:20) என்று மகிழ்ச்சியோடு கூறமுடியும். ஆமென் அல்லேலூயா!*

*இனி ஜீவிப்பது நான் அல்ல*
*கிறிஸ்துவே என்னில் ஜீவிக்கிறார்*
*அவரே அவரே இயேசு என்னில் ஜீவிக்கிறார்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, சிலுவை சுமக்கும் அனுபவத்திற்குள் நாங்கள் கடந்து வரும்போது அதை குறித்து முணுமுணுக்காதபடி, எங்களை நாங்கள் வெறுத்து, அனுதினமும் எங்கள் சிலுவையை சுமந்து கிறிஸ்துவுக்கு பின்பற்றும்படி கிருபை செய்யும். இனி வாழ்வது நாங்கள் அல்ல, கிறிஸ்துவே எங்களுக்குள் வாழ்கிறார் என்பதை உணர்ந்து, அவருக்குள் பிழைத்திருக்க கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## 16. சத்துருவை சிநேகியுங்கள்

*உன் சத்துரு பசியாயிருந்தால், அவனுக்குப் புசிக்க ஆகாரங்கொடு; அவன் தாகமாயிருந்தால், குடிக்கத் தண்ணீர்கொடு. அதினால் நீ அவன் தலையின்மேல் எரிகிற தழல்களைக் குவிப்பாய்; கர்த்தர் உனக்குப் பலனளிப்பார் - நீதிமொழிகள் 25:21,22.*

மேற்கு பெர்லினை சுற்றி ஜெர்மனி நாடு ஒரு சுவற்றை எழுப்பி, அதை கிழக்கு ஜெர்மனி மற்றும் கிழக்கு பெர்லினோடு உறவில்லாதபடி தனித்து இருந்த காலம். கிழக்கு பெர்லினிலிருந்து மேற்குக்கு யாரும் போக முடியாது, அப்படி போகிறவர்கள் மரணத்தை சந்தித்த காலம். ஆகவே கிழக்கிலிருந்த பெர்லின் மக்களுக்கு மேற்கு பெர்லினை சேர்ந்தவர்கள் மேல் கடும் கோபம் இருந்து வந்தது. ஆதலால் ஒரு முறை அவர்கள் ஒரு லாரி முழுவதுமாக, குப்பைகளையும், தேவையற்ற பொருட்களையும், கற்களையும் அதில் ஏற்றி, அதை 'பரிசாக உங்களுக்கு அனுப்புகிறோம்' என்று மேற்கு பெர்லினுக்கு அனுப்பி வைத்தனர்.

அதை கண்ட மேற்கு பெர்லினருக்கு கோபம் வந்தது. அவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும் என்று நினைத்தனர். அப்போது ஒரு வயதான ஞானமுள்ள மனிதர், அவர்களிடம், 'நாம் அவர்கள் எதிர்பாராத காரியத்தை செய்ய வேண்டும்' என்ற சொல்லி, அவர்களும் ஒரு லாரி நிறைய ஆனால் அவர்கள் அனுப்பியது போலில்லாதபடி, உணவு வகைகள் (அது கிழக்கு பெர்லினியருக்கு தட்டுப்பாடாக இருந்த காலம்), உடைகள், மருந்து வகைகள் எல்லாவற்றையும் ஏற்றி, அதை கிழக்கு பெர்லினுக்குள் அனுப்பி, அதை அவர்களிடம்

இறக்கிவிட்டு, அதில் ஒரு குறிப்பை மட்டும் எழுதி வைத்திருந்தனர். அந்த குறிப்பில், ஒவ்வொருவரும் தங்களால் எதை அனுப்ப முடியுமோ அதையே அனுப்பபுவார்கள் என்று எழுதப்பட்டிருந்தது. அதை கண்ட கிழக்கு பெர்லினை சேர்ந்தவர்களின் முகத்தில் ஈயாடியிருக்காது என்று நினைக்கிறேன்.

உன் சத்துரு பசியாயிருந்தால், அவனுக்குப் புசிக்க ஆகாரங்கொடு; அவன் தாகமாயிருந்தால், குடிக்கத் தண்ணீர்கொடு. அதினால் நீ அவன் தலையின்மேல் எரிகிற தழல்களைக் குவிப்பாய்; கர்த்தர் உனக்குப் பலனளிப்பார் என்று வசனம் கூறுகிறது. ஆனால் அந்த அன்பு உள்ளத்தில் இல்லாததால் இன்று உலகம் இருக்கும் நிலைமை எத்தனை பயங்கரமானது! பழைய ஏற்பாட்டின் காலத்தில் இருந்ததைப் போல கண்ணுக்கு கண், பல்லுக்கு பல் என்று இன்னும் நாடுகள் தங்கள் வஞ்சங்களை தீர்த்து கொண்டிருக்கிறார்கள். கிறிஸ்துவின் அன்பு உள்ளத்தில் ஊற்றப்பட்டிருந்தால், இந்த மாதிரி காரியங்கள் நடக்காதே! சத்துருவை சத்துருவாகவே பார்க்கும்போது எத்தனை பயங்கரங்கள்!

கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல் என்று, உரைக்கப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைச் சபிக்கிறவர்களைச் ஆசீர்வதியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும் ஜெபம்பண்ணுங்கள். இப்படிச் செய்வதினால் நீங்கள் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவுக்குப் புத்திரராயிருப்பீர்கள்; அவர் தீயோர் மேலும்

நல்லோர்மேலும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி, நீதியுள்ளவர்கள்மேலும் அநீதியுள்ளவர்கள்மேலும் மழையைப் பெய்யப்பண்ணுகிறார் (மத்தேயு 38, 44,45). என்று இயேசுகிறிஸ்து கூறினார்.

நாம் இயேசுகிறிஸ்து கூறியபடி சத்துருக்களைச் சிநேகிக்கும்படியாகவே அழைக்கப்பட்டிருக்கிறோம். அவர் சிலுவையில் பாடுபடும்போதும், பிதாவே இவர்களுக்கு மன்னியும், தாங்கள் செய்வது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே என்று தன்னை பகைத்தவர்களையும் மன்னித்து அன்பு கூர்ந்தாரே!

நம்மை பகைகிறவர்களுக்கு நன்மை செய்தால், அதினால் நீ அவன் தலையின்மேல் எரிகிற தழல்களைக் குவிப்பாய்; கர்த்தர் உனக்குப் பலனளிப்பார்; என்ற சொன்னபடி கர்ததர் நமக்கு ஏற்ற நன்மைகளை தருவார். காரணமில்லாமல் உங்களை நிந்திக்கிறார்களா? உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும் ஜெபம்பண்ணுங்கள். அவர்கள் உள்ளம் மாறி உங்களிடம் அன்பாக நடந்து கொள்வதை நீஙகள் கண்கூடாக காண்பீர்கள்! நம் தேவனை விசுவாசியாதவர்களும், வெறுக்கிறவர்களும் எத்தனையோ பேர் இருந்தும், அவர் தீயோர் மேலும் நல்லோர்மேலும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி, நீதியுள்ளவர்கள்மேலும் அநீதியுள்ளவர்கள்மேலும் மழையைப் பெய்யப்பண்ணுகிறாரே! அவர் எத்தனை நல்லவர்! அவருடைய பிள்ளைகளாய் இருக்கிற நாமும் அவர் செய்தபடி செய்யவேண்டும். அப்போதுதான் அவருடைய பிள்ளைகளாய் நாம் இருக்க முடியும். அப்போது கர்த்தருடைய ஆசீர்வாதம் நம் தலையின்மேல் நிச்சயமாக இறங்கும்! ஆமென் அல்லேலூயா!

மனிதர் என்னை இகழ்நதாலும்
மனமோ தளர்வதில்லை
கோதுமை மணிபோல் மடிந்திடுவேன்
சிலுவையை சுமந்திடுவேன்

இயேசு நம்மோடு இன்று ஆனந்தம்
இயேசு நம்மோடு என்றும் ஆனந்தம்

**ஜெபம்:** இருளின் அதிகாரத்தில் இருந்த எங்களை இயேசுவின் ராஜ்ஜியத்திற்கு தகுதியாக்கின எங்கள் நல்ல கர்த்தரே, உம்மை துதிக்கிறோம். எங்கள் சத்துருக்களை நேசிக்க எங்களுக்கு கிருபை செய்யும். தேவையில்லாமல் எங்களை நிந்திக்கிறவர்களையும், எங்களை சபிக்கிறவர்களையும் நாங்கள் நேசிக்க எங்களுக்கு கிருபை செய்யும். நீர் எங்களுக்கு காட்டிப்போன பாதையில் நாங்களும் நடந்து, சத்துருக்களை சிநேகிக்கவும், அவர்களுக்காக ஜெபிக்கவும் எங்களை தகுதிபடுத்தும். அதன் மூலம் நாங்கள் உம்முடைய பிள்ளைகள் எனபதை அவர்கள் அறிந்துகொள்ள கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

## 17. தன்னை இரட்சிக்க திராணியில்லை

*மற்றவர்களை ரட்சித்தான்; தன்னைத்தான் ரட்சித்துக்கொள்ளத் திராணியில்லை; இவன் இஸ்ரவேலின் ராஜாவானால் இப்பொழுது சிலுவையிலிருந்து இறங்கிவரட்டும்இ அப்பொழுது இவனை விசுவாசிப்போம் - மத்தேயு 27:42.*

*ஒரு விவசாயியின் வீட்டில் ஒரு போதகர் வாடகைக்கு குடியேறினார். அந்த விவசாயி ஒரு கிறிஸ்தவரல்ல. போதகர் அவரிடம் கிறிஸ்துவின் அன்பை பகிர்ந்துக் கொள்ள நேரம் பார்த்திருந்தார்.*

*கடைசியில் ஒரு நாள் வந்தது. அன்று அதிகாலையில் அந்த விவசாயி போதகரை தன்னுடைய கோழிப்பண்ணைக்கு அழைத்து சென்றார். ஒரு இடத்தில் ஒரு கோழி தன் குஞ்சுகளின் மீது தனது இறக்கையை வைத்து மூடியபடி உட்கார்ந்திருந்தது. அந்த குஞ்சுகள் கோழியின் இறக்கையின் வழியாக வெளியே வர எத்தனித்துக் கொண்டிருந்தன.*

*அந்த விவசாயி போதகரைப் பார்த்து, 'அந்த கோழியை தொட்டுப் பாருங்கள் ஐயா' என்றார். போதகர் அந்த கோழியை தொட்டுப்பார்த்தபோது, அது குளிர்ந்துபோயும், செத்தும் இருந்தது. 'அதனுடைய தலையில் இருக்கும் காயத்தைப் பாருங்கள் ஐயா. ஒரு கீரிப்பிள்ளை வந்து அதைக் கடித்து இரத்தத்தை எல்லாம் குடித்து விட்டது. ஆனாலும் அது இருந்த இடத்தைவிட்டு அசையாமல் அப்படியே இருந்து தன் குஞ்சுகளை காத்துக் கொண்டது. அந்த கீரிப்பிள்ளை தன் குஞ்சுகளை தொடாமல் பாதுகாத்திருக்கிறது' என்றார்.*

'ஓ, அதுப் போலத்தான் இயேசுகிறிஸ்துவின் அன்பும். அவர் சிலுவையில் எல்லா பாடுகளையும் சகித்தார். அவர் தேவனுடைய குமாரனாய் இருந்தபடியால் தம்மை அவர் காப்பாற்றி கொள்ள முடிந்திருக்கும். தன்னை இரட்சித்துக் கொள்ள முடிந்திருக்கும். ஆனால் அவர் அப்படி செய்திருந்தால் நாம் நம் இரட்சிப்பை இழந்திருப்போம். சத்துரு நம்மை வேட்டையாடி இருந்திருப்பான்' என்று போதகர் இரட்சிப்பைக் குறித்து தெளிவாக அந்த விவசாயிக்கு விளக்கினபோது, ஆவியானவர் அவருடைய இருதயத்தில் கிரியை செய்தார். அவர் தன்னுடைய விசுவாசத்தை கல்வாரியில் தம்மை காத்துக் கொள்ள முடிந்தும், நம்மை இரட்சிப்பதற்காக தம்மையே கொடுத்த இயேசுகிறிஸ்துவிடம் அர்ப்பணித்தார்.

சிலுவையின் பாடுகள் ஒன்றும் எளிதான ஒன்றல்ல, அவர் தமது கடைசி சொட்டு இரத்தத்தையும் நமக்காக சிந்தி அந்த பாடுகளை சகித்தபடியினால் நாம் இன்று இரட்சிக்கப்பட்டிருக்கிறோம். அவர் சிலுவையை சுமக்காதிருந்தால், பாடுகளை சகிக்காமலிருந்திருந்தால் நம் பாவத்திற்கேற்ற தண்டனையாக ஆக்கினை தீர்ப்பை அடைந்திருப்போம். ஆனால் அவர் பாடுகளை சுமந்ததினாலே, நமக்கு இரட்சிப்பு உண்டாயிற்று. ஆக்கினை தீர்ப்பிலிருந்து நாம் விடுவிக்கப் பட்டோம். அல்லேலூயா!

தன்னை இரட்சிக்க திராணியில்லை, சிலுவையிலிருந்து இறங்கி வரட்டும், அப்போது இவனை விசுவாசிப்போம் என்று சொன்னவர்கள் இரட்சிப்பை இழந்து போனார்கள். அவர் சிலுவையிலிருந்து இறங்கி வந்து தம்மை தேவக்குமாரன் என்று நிரூபித்திருக்க முடியும். ஆனால் பிதாவின் சித்தத்திற்கு தம்மை ஒப்புக்கொடுத்து, கிருபையாய், அத்தனை கொடும்

பாடுகளையும் அவர் சுமந்து, சிலுவையில் தம் ஜீவனை கொடுத்தபடியால், மரணபரியந்தம் தம்மை தாழ்த்தினபடியால் வானோர் பூதலத்துள்ளோர், பூமியின் கீழானோர் யாவருடைய முழங்கால்களும் அவருடைய நாமத்திற்கு முடங்கும்படியான உன்னத நாமத்தை அவர் பெற்றுக்கொண்டார். ஆமென் அல்லேலூயா!

*எல்லா நாமத்திற்கும் மிக*
*மேலான நாமம்*
*இயேசுவின் நாமமே*
*எல்லா தலைமுறையும் போற்றும்*
*உன்னத நாமம்*
*இயேசுவின் நாமமே*

*இயேசு நாமமே ஜெயம் ஜெயமே*
*சாத்தானின் சக்தி ஒன்றுமில்லையே*
*அல்லேலூயா ஓசன்னா அல்லேலூயா*
*அல்லேலூயா ஆமென்*

**ஜெபம்:** எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, மற்றவர்கள் இயேசுகிறிஸ்துவை, தன்னை இரட்சித்துக்கொள்ள திராணி இல்லை என்று இழிவாக பேசினபோதும், கோபப்படாமல் கடைசி சொட்டு இரத்தம் வரை சிந்தி, எங்களுக்கு கொடுத்த இரட்சிப்பிற்காக உள்ளத்தின் ஆழத்திலிருந்து நன்றி செலுத்துகிறோம் ஐயா. அவருடைய இரட்சிப்பை பெறாதவர்கள் அவருடைய அன்பை எண்ணிப்பார்த்து

இரட்சிப்படைய கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

# 18. நல்வார்த்தைகள்

*மனுஷனுடைய இருதயத்திலுள்ள கவலை அதை ஒடுக்கும்; நல்வார்த்தையோ அதை மகிழ்ச்சியாக்கும் - நீதிமொழிகள் 12:25.*

ஒரு நண்பர் இன்னொரு நண்பரின் வீட்டிற்கு விருந்துக்கு அழைக்கப்பட்டிருந்தார். அவர் சென்றவுடன் உணவு பறிமாறப்பட்டது. எல்லாமே மிகவும் பிரமாதமாக இருந்தது. ஆனால் கடைசியாக பறிமாறப்பட்ட பால் பாயாசம் மாத்திரம் நன்றாக இல்லை. அது அவருக்கு புரிந்தாலும் அதையும் அவர் பாராட்டினார்.

சில மாதங்கள் கழித்து, மீண்டும் அதே நண்பர் விருந்துக்கு அழைத்தார். அதேப் போல உணவு சுவையாக இருந்தது, ஆனால் கடைசியாக கொடுத்த இனிப்பு மிகவும் சுவையாக இருந்தது. ஆனால் அதை சாப்பிட்ட அவர் ஒன்றும் சொல்லவில்லை.

அதைக்கண்ட அந்த நண்பரின் மனைவி, 'போனமுறை நான் கொடுத்த பால்பாயாசம் நன்றாகவே இல்லை, ஆனால் நீங்கள் மிகவும் பாராட்டினீர்கள், ஆனால் இந்த முறை இந்த இனிப்பு மிகவும் நன்றாக வந்தது. ஆனால் நீங்கள் ஒன்றுமே சொல்லவில்லையே' என்றார்கள். அதற்கு அவர் புன்னகைத்து, 'இன்றைய இனிப்பு மிகவும் அருமையாக, ருசியாக இருந்தது. போனமுறை நீங்கள் கொடுத்த பால்பாயாசத்தை விட மிகவும் ருசியாக இருந்தது. ஆகையால் பால்பாயாசம்தான் அதிக பாராட்டை பெறவேண்டும். ஏனென்றால் அதன் ருசியை

பார்த்தபிறகுதான் இந்த இனிப்பின் ருசி அதிகமாக தெரிகிறது' என்றார்.

நம்முடைய சக மனிதர்களோடு நாம் கொண்டிருக்கும் உறவுகளும் இப்படித்தான் இருக்கிறது. சில மனிதர்களுக்கு நாம் அதிகமாக உற்சாகப்படுத்த வேண்டி இருக்கும். சில மனிதர்களுக்கு ஒன்றும் சொல்லாமலேயே புரிந்துகொள்வார்கள், அவர்கள் வேலை சிறந்தது என்று. ஒரு மனிதர் எத்தனை சரியாக வேலை செய்யாமலிருந்தாலும், மிகவும் மோசமாக அந்த வேலையை முடித்திருந்தாலும், நாம் எதையாவது நல்லதை கண்டுபிடித்து அதை பாராட்டும்போது, அவருக்கு இன்னும் நன்றாக செய்ய வேண்டும் என்று தோன்றும் அந்த பெண்மணியைப் போல!

நாம் எல்லாருமே நாம் செய்யும் வேலைகளுக்கு மற்றவர்கள் பாராட்ட வேண்டும் என்றே எதிர்ப்பார்க்கிறோம். அப்படி பாராட்டாதபடியால் சோர்ந்து போனவர்கள் அநேகர் இருக்கிறார்கள். என் வேலை இடத்திலும் நான் எத்தனை அருமையாக வேலை செய்தாலும் என்னை உற்சாகப்படுத்தவோ, நல்ல வார்த்தை சொல்லவோ யாருமே இல்லை. நான் மிகவும் சோர்ந்து போனதுண்டு. அவர்கள் நினைப்பது, அது என் கடமை, நான் அதை செய்யத்தான் வேண்டும் என்று! ஆனால் ஒரு நல்ல வார்த்தை என்னை இன்னும் அதிகமாக ஊக்குவித்திருக்கும். அநேக வேலையிடங்களில், வீடுகளில் இந்த இரகசியம் தெரியாத மேலதிகாரிகளும், குடும்பத்தினரும் இருக்கிறார்கள். நல்வார்த்தை எப்போதும் மனதை மகிழ்ச்சியாக்கும். இன்னும் செய்ய தூண்டும்.

நாம் வேலை செய்யும் இடங்களிலும், குடும்பங்களிலும் மற்றவர்களை ஊக்குவித்து பாராட்டுவோம். அவர்கள் மோசமாய் செய்தாலும் அதை நாம் பாராட்டும்போது இன்னும் நன்றாக செய்வார்கள். சிலருக்கு அதிகமாக ஊக்குவிக்க வேண்டி இருக்கும். அவர்கள் சோர்ந்து போகாமல் இருக்க பாராட்டுவோம். மனுஷனுடைய இருதயத்திலுள்ள கவலை அதை ஒடுக்கும், ஆனால் நல்வார்த்தையோ அதை மகிழ்ச்சியாக்கும். ஆமென் அல்லேலூயா!

மனிதனைப் படைத்த கடவுள் அவனை
மண்ணென்று சொன்னாரே - அவன்
மண்ணென்று கண்டும் தேடியே வந்து ஜீவனைத் தந்தாரே
உறவும் அன்பும் உள்ளவன் மனிதன் என்பதை மறவாதே
அவன் பழக்கம் கண்டு இவன் தான் என்று
முடிவு செய்யாதே அவனை இழந்துவிடாதே

**ஜெபம்:** எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, மனிதன் மற்றவர் தன்னை பாராட்ட வேண்டும், தன்னை மதிக்க வேண்டும் என்று நினைக்கிறபோது அப்படிப்பட்டவர்களை பாராட்டவும், ஊக்கம் தேவையாயிருப்பவர்களுக்கு ஊக்கப்படுத்தவும் எங்களுக்கு கற்றுத்தாரும். மற்றவர்களை உற்சாகப்படுத்தி அவர்களை மகிழ்விக்க ஞானத்தை தாரும். நல்வார்த்தையினால் அந்த இருதயங்களை மகிழ்ச்சியாக்க கற்றுத்தாரும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

# 19. மன்னிப்பு தரும் சுகம்

*நீங்கள் நின்று ஜெபம் பண்ணும் போது, ஒருவன் பேரில் உங்களுக்கு யாதொரு குறை உண்டாயிருக்குமானால், பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களை உங்களுக்கு மன்னிக்கும்படி, அந்தக் குறையை அவனுக்கு மன்னியுங்கள்' - மாற்கு 11:25.*

ஒரு பெண்மணி புற்று நோயினால் மிக கடுமையாக பாதிக்கப்பட்டிருந்தாள். அவள் அதிக பட்சம் ஆறு மாதங்களே உயிரோடிருப்பாள் என மருத்துவர்கள் கூறி விட்டனர். ஒரு நாள் மருத்துவர்கள் சொன்ன முடிவை தனது 12, 14 வயது மகன்களிடம் தெரிவித்தாள். உடனே மூத்தவன் ஒரு வேதாகமத்தை கொண்டு வந்து தாயின் அருகில் அமர்ந்துமாற்கு 11:24-ம் வசனத்தை வாசித்தான். 'ஆதலால், நீங்கள் ஜெபம்பண்ணும் போது எவைகளைக் கேட்டுக்கொள்வீர்களோ, அவைகளைப் பெற்றுக்கொள்வோம் என்று விசுவாசியுங்கள், அப்பொழுது அவைகள் உங்களுக்கு உண்டாகும் என்று சொல்லுகிறேன்'. 'இந்த வார்த்தையின்படி நாம் ஜெபிப்போம் அம்மா, கர்த்தர் உங்களுக்கு சுகத்தை தருவார்' என்று கூறினான்.

அந்த வசனத்தை கேட்டவுடன் அந்த தாய் மிகவும் ஆச்சரியப்பட்டாள். அவள் ஒரு கிறிஸ்தவளாயிருந்தாலும் இந்த வசனம் வேதத்தில் இருப்பத்தை அறிந்திருக்கவில்லை. அன்றிரவு படுக்கைக்கு செல்லும் முன் மகன் வாசித்த வேத வசனத்தை எடுத்து வாசித்தாள். அதை தொடர்ந்துள்ள வேத வசனங்களையும் வாசிக்க தூண்டப்பட்டாள். 'நீங்கள் நின்று ஜெபம் பண்ணும்போது, ஒருவன் பேரில் உங்களுக்கு யாதொரு குறை உண்டாயிருக்குமானால், பரலோகத்திலிருக்கிற உங்கள்

பிதா உங்கள் தப்பிதங்களை உங்களுக்கு மன்னிக்கும்படி, அந்தக் குறையை அவனுக்கு மன்னியுங்கள்' இவ்வசனம் அவளோடு இடைபட ஆரம்பித்தது. அவளுடைய உறவினர்கள் பேரில் அவளுக்கிருந்த மன்னிக்க முடியாத நிலைமையை அவளுக்கு உணர்த்திற்று.

தன் உறவினர்கள் அனைவரையும் மன்னிக்க தனக்கு உதவிசெய்யம்படி கர்த்தரிடம் மனங்கசந்து அழுது மன்றாடினாள். என்ன ஆச்சரியம்! அநேக மாதங்களாக நித்திரையின்றி கஷ்டப்பட்ட தாய் ஒரு குழந்தை தன் தாயின் கரங்களில் உறங்குவது போல அன்றிரவு நன்றாக உறங்கினாள். மறுநாள் காலையில் தான் நல்ல ஆரோக்கியத்துடன் இருப்பதை உணர்ந்து மருத்துவரை காண சென்றாள். புற்று நோய் முற்றிலும் அற்று போயிருப்பதை கண்டு மருத்துவர்கள் பிரமிப்படைந்தனர். இப்போது நல்ல சுகத்துடன் அந்த சகோதரி புற்று நோயாளிகள் மத்தியில் ஊழியக்காரியாக தொண்டு செய்து வருகிறார்கள். எல்லா புற்றுநோயும் மன்னிக்காததினால் தான் வருகின்றது என்று சொல்ல முடியாது. மன்னிக்காததினாலும் வரலாம் என்பதற்கு இது ஒரு சாட்சி.

'மன்னிப்பு' என்பதற்கு கிரேக்க பதத்திற்கு 'விடுதலையாக்குதல்' என்ற அர்த்தமும் உண்டு. நமக்கு விரோதமாக தவறிழைத்தவர்களை மன்னிப்பதின் மூலமாக நாம் அவர்களை விடுதலையாக்குவதோடு மட்டுமல்லாமல், நம்மையும் விடுவித்து கொள்கிறோம். மற்றவர்களை முழு இருதயத்தோடும் மன்னிக்க முடியாதவர்களால் மெய்யான விடுதலையை ஒருபோதும் அனுபவிக்க முடியாது. பிறரை மன்னிக்க முடியாதவர்கள் கோபம், பழிவாங்குதல், கசப்பு, சீற்றம் முதலான நோய்களால் பாதிக்கப்பட்ட மக்களால்

*நிறைந்த நோய் கொண்ட ஒரு உலகமாகவே காணப்படுவார்கள். உடனுக்குடன் மன்னித்து தங்களுடைய இருதயத்திலிருந்து அன்புகூரக்கூடிய ஒரு கூட்ட ஜனங்கள் தேவனுக்கு தேவையாயிருக்கிறார்கள். அவர்களையே அவர் வல்லமையாக பயன்படுத்துகிறார்.*

*மன்னித்தல் நொறுங்கிய இருதயங்களை குணமாக்கும். முறிந்து போன விவாகங்களை இணைத்து விடும். சிதைந்து போன வாழ்க்கையை சீர்ப்படுத்தி விடும். தகர்ந்து போன குடும்பங்களை ஒன்றாக்கி விடும். மன்னிக்கும் ஜனங்களுக்கு மாத்திரமே ஒளிமயமான எதிர்காலம் உண்டு. இவர்கள் மட்டுமே சிறந்ததொரு வருங்காலத்தை மற்றவர்களுக்கு வழங்கக்கூடும்.*

*பிறரை மன்னிக்க முடியாதவர்கள் மரிக்கும்போது கூட பற்களை கடிக்கின்றனர் என சிலர் கூறுவதுண்டு. ஆனால் நம்முடைய அருமை ஆண்டவர் இயேசுகிறிஸ்து சிலுவையில் தொங்கி கொண்டிருக்கும்போது கூட 'பிதாவே இவர்களுக்கு மன்னியும், தாங்கள் செய்வது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே' என்று சொல்லி தமக்கு விரோதமாக தம்மை சிலுவையில் அறைந்தவர்களை மன்னித்தார். பிறரை மன்னித்தவர்களால் மாத்திரமே தங்கள் ஆவியை பிதாவின் கரங்களில் சமாதானத்துடன் ஒபபு கொடுக்க முடியும். பிறரை மன்னிக்க முடியாதவர்கள் கசப்பான எண்ணங்களுடனேயே புறம்பான இருளுக்குள் கடந்து செல்வார்கள். ஆகவே மற்றவர்களை மன்னிப்போம், இந்த வாழ்விலும், மறுமையிலும் சந்தோஷமாய் நாம் வாழ்வோம். ஆமென் அல்லேலூயா!*

*என்னை மன்னித்தது போல*
*மற்றவர்களை நானும் மன்னிக்கணுமே*
*என் அன்றாட உணவை*
*அனுதினமும் தர வேண்டுமே*
*இயேசு மகராஜனே மீண்டும் வந்திடுவீரே*
*உம் மக்களாய் கூடி வந்துள்ளோம்*
*உம் மகிமையை தரிசிக்க*

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, நீர் எங்களை மன்னித்து, எங்கள் ஆத்துமா நரகாக்கினையில் விழுந்து விடாதபடி, பரலோக ராஜ்யத்திற்கு தகுதிபடுத்தினீரே உமக்கு எங்கள் நன்றி ஐயா. நாங்களும் மற்றவர்களுக்கு மன்னிக்க எங்களுக்கு உதவி செய்யும். நாங்கள் மற்றவர்களுக்கு மன்னிக்கிறது போல எங்கள் குற்றங்களை எங்களுக்கு மன்னியும் என்கிற கர்த்தரின் ஜெபத்தை உணர்ந்து சொல்கிறவர்களாக எங்களுக்கு கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 20. கடினப்பட்ட மனசாட்சி

*உங்களில் ஒருவனாகிலும் பாவத்தின் வஞ்சனையினாலே கடினப்பட்டுப் போகாதபடிக்கு, இன்று என்னப்படுமளவும் நாடோறும் ஒருவருக்கொருவர் புத்திசொல்லுங்கள் - எபிரெயர் - 3:13.*

அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் பல கப்பல்களை கொள்ளை அடிப்பதற்கு காரணமாக இருந்த ஒருவன் தீவிர தேடுதலுக்கு பின் இறுதியில் போலீஸிடம் பிடிபட்டான். போலீஸ் விசாரணைக்குப்பின் நீதி மன்றம் அவனுக்கு நியூயார்க் பட்டணத்தில் மரண தண்டனை கொடுக்கும்படி தீர்ப்பளித்தது. இதன் மத்தியில் விசாரணையின் போது அவனிடம் நூற்றுக்கணக்கானோரை கொல்வதற்கு அவனது மனசாட்சி எப்படி இடம் கொடுத்தது என்று அவனிடம் கேட்ட போது, அவன் கொடுத்த பதில் 'முதல் கொள்ளை அடித்தபோதும், முதல் கொலை செய்தபோதும் என் மனசாட்சி என்னை மிகவும் பயங்கரமாக உறுத்திற்று. ஆனால் நாளடைவில் அதில் பழகி போய் விட்டேன். ஒரே சமயத்தில் 30 அல்லது 40 பேரை சுட்டு கொன்று விட்டு உடனே படுத்து நிம்மதியாக தூங்க கூடிய அளவிற்கு என் மனசாட்சியை மழுங்கடித்து விட்டேன்' என்று பதில் கூறினானாம்.

இம்மனிதனுடைய பதிலை கவனித்தீர்களா? இதில் எவ்வளவு பயமின்மையும் துணிகரமும் கலந்து காணப்படுகிறது! பொதுவாகவே இரட்சிக்கப்படாத மக்களை குறித்து சொல்லும்போது மனசாட்சியை கொலை செய்து விட்டு இஷ்டம் போல் வாழ்கிறவர்கள் என்று கூறுகிறோம். ஆனால் இதே போன்று தவறு என்னிடத்தில் உள்ளதா என்பதை

தீவிரமாய ஆராய்ந்து பார்க்க நம் ஒவ்வொருவரும் கடமைப்பட்டுளளோம். ஒரு காரியத்தை செய்யும்போது அது தவறு என்றும், தேவனுடைய பார்வையில் பாவம் என தெரிந்தும் மீறி செய்யும்போது நம் மனது தீவிரமாய் அடித்து கொள்கிறது. ஆனால் இப்படி பாவம் என்று உணர்த்த கூடிய மனசாட்சியை அலட்சியப்படுத்திவிட்டு, தொடர்ந்து தவறு செய்யும்போது நாளடைவில் மனசாட்சியானது செத்து விடுகிறது. பின்பு மனம் போல வாழ்க்கையுடன் பாவமும் பெருகுகிறது. பாவம் பூரணமாகும்போது மரணத்தை உண்டாக்குகிறது. இதற்கு நாம் விலகி தப்பும்படியாகவே அன்பின் தேவன் நமக்கு ஆலோசனையை உறுதியாக கூறுகிறார்.

ஒருவேளை நாம் கொள்ளையோ, கொலையோ செய்யாமல் இருக்கலாம், ஆனால் தகாத உறவுகள், பிறருக்கு தெரியாமல் பணத்தை எடுத்து பழகுவது, பொய் சொல்வது… இப்படிப்பட்ட காரியங்களை செய்தபோது ஆரம்பத்தில் உறுத்தின மனசாட்சி, இப்போது பாவத்தில் மூழ்கி போனதால், செத்து போய்விட்டதோ? மனசாட்சி உறுத்தி கொண்டிருக்கும் வரையில் நமக்கு ஒரு நம்பிக்கை உண்டு. ஆவியானவர் குற்றம் என்று சொல்வதால் நம் மனசாட்சி உறுத்தி கொண்டிருக்கிறது. அப்போதே நாம் மனம் திரும்பி, பாவ மன்னிப்பு பெற்று விட வேண்டும். ஆனால் மனசாட்சியை மழுங்கடித்தப்பின், கிருபை நம்மை விட்டு எடுபட்டு போகிறது. அப்போது யாரும் மனம் திரும்ப முடியாத நிலைமையை அடைந்து விடுகிறது. அந்த நிலைக்கு வருமுன், தேவன் கிருபையாய் கொடுத்திருக்கிற பாவ மன்னிப்பின் நிச்சயத்திற்குள் வந்து விடுங்கள்.

பரிசுத்த வேதாகமத்தில் இப்படிப்பட்ட பாவத்தோடு வாழ்ந்து முடிவில் மோசமான நிகழ்வை சந்தித்தவர்கள் ஏராளம்.

இவர்கள் அனைவரும் தங்கள் மனசாட்சியை மழுங்கடித்தவர்கள். இதை வாசிக்கிற நாம் இதிலிருந்து உணர்வடைய வேண்டும். பாவமான காரியங்களிலிருந்து வெளியே வரவேண்டும். இந்த காரியத்திலிருந்து நான் வெளியே வருவேன் என்று உறுதியான முடிவெடுத்து, செயல்படுங்கள். உங்களுக்கு உதவவே ஆவியானவர் காத்திருக்கிறார்.

பாவம் செய்து மனசாட்சியை கொன்று வீணான வாழ்வு வாழ்வதை விட்டுவிட்டு சத்திய தேவனுக்காய் உண்மையாய வாழ பிரயாசம் எடுங்கள். நிச்சயம் நீங்கள் வெற்றி பெறுவீர்கள். கர்த்தர் உங்களை கழுவி சுத்திகரித்து, மீண்டும் தம்முடைய மகனாக மகளாக மாற்றி, உங்களை வாழ வைப்பார். ஆமென் அல்லேலூயா!

இன்றைக்கு நான் செய்யும் இந்த தீர்மானத்தை
என்றைக்கும் காத்திட ஆவியால் நிரப்பும்
நொறுக்கும், உருக்கும், உடையும், வனையும்
உமக்கே உகந்த தூய சரீரமாய்
ஐம்பொறிகளையும் உமக்குள் அடக்கும்
இயேசுவே ஆவியால் நிரப்பும்
வெற்றி வாழ்க்கையுள்ள மகனாய் திகழ
அக்கினி என் உள்ளம் இறக்கும்

**ஜெபம்:** எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, சுத்த மனசாட்சியை காத்துக் கொள்ள எங்களுக்கு ஞானத்தை தாரும். பாவம் செய்து செய்து, மனசாட்சி மழுங்கப்பட்டவர்களாக வாழாமல், ஆவியானவரின் மெல்லிய சத்தத்துக்கு கீழ்ப்படிந்தவர்களாக, பாவத்திற்கு விலகி ஜீவிக்க

கிருபை தாரும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

## 21. பொய்யை களைவோம்

*அன்றியும் நாம் ஒருவருக்கொருவர் அவயவங்களாயிருக்கிறபடியால், பொய்யைக் களைந்து, அவனவன் பிறனுடனே மெய்யைப் பேசக்கடவன் - எபேசியர் 4:25.*

அமெரிக்க தேசத்தின் முதல் ஜனாதிபதி ஜார்ஜ் வாஷிங்டன் ஆறு வயது சிறுவனாக இருக்கும்போது தன்து பெற்றோருடன் பெரிய பண்ணையில் வசித்து வந்தார். அங்கு ஏராளமான மரங்கள் இருந்தன. அவ்வப்போது வேலையாட்கள் மரங்கள் வெட்டுவதை ஆவலுடன் கவனிப்பார் வாஷிங்டன். எனவே அவரது தகப்பனார் ஒரு சிறய கோடாரி ஒன்றை மகனுக்கு வாங்கிக் கொடுத்தார். அவருடைய அம்மாவிற்கு தேவையான காய்ந்த சிறு குச்சுகளை சிறிய கோடாரியை உபயோகித்து தறித்துக் கொடுப்பார். ஒரு முறை தோட்டத்தில் கோடாரியுடன் உலாவும்போது மரக்கன்று ஒன்றைக் கண்டார். அது அவரது தகப்பனாரால் நடப்பட்டு பத்திரமாக பாதுகாப்புடன் வளர்க்கப்பட்ட செரி என்ற ஒரு வகை பழமரம்.

ஒருநாள் வாஷிங்டனின் கைகள் குறுகுறுவென்று இருந்து எதையாவது வெட்ட வேண்டும் போலிருந்தது. கோடாரியை வைத்து இந்த மரக்கன்றை வெட்டினார். ஒரே வெட்டில் சிறிய மரம் கீழே சாய்ந்தது. மறுநாள் அந்த பக்கத்தில் சென்ற அவரது தகப்பனார் இவர் விருப்பத்துடன் வளர்த்த அந்த மரம் வெட்டப்பட்டு கீழே சரிந்து கிடந்ததைக் கண்டு மிகவும் கோபத்துடன் வீடு திரும்பினார். யார் அந்த மரத்தை வெட்டினார் என்று கேட்டார். ஒருவரும் பதில் சொல்லவில்லை.

அப்போது வாஷிங்டன் தனது சிறு கோடாரியுடன் வீட்டிற்குள் வந்தார். அவரிடமும் வெட்டப்பட்ட மரத்தைக் குறித்துக் கேட்டார். முதலாவது தடுமாறினாலும், சுதாரித்துக் கொண்ட ஜார்ஜ் அப்பா என்னால் பொய் சொல்ல முடியாது என்னால் பொய் சொல்ல முடியாது, நான்தான் எனது சிறு கோடாரியை வைத்து அதை வெட்டினேன் என்றார். கோபம் தணிந்த அவரது அப்பா தனது கரங்களில் அவனை அணைத்துக் கொண்டு மகனே உண்மையை பேசுவதற்கு அஞ்சக்கூடாது. அதாவது வெள்ளிப்பூ பூக்கும் தங்கத்தினாலாகிய இலைகளுள்ள ஆயிரம் மரங்களிருந்தாலும் உண்மை பேசுவது அதைவிட மேலானது என்று அவரைப் பாராட்டினார்.

என்னால் பொய் சொல்ல முடியாது என்று நம்மில் எத்தனைப்பேர் சொல்லமுடியும்? பொய் பேசுவது மிகவும் சகஜமாக மாறிப்போன பழக்கமாக இருக்கிறது. அநேகர் இதை ஒரு பாவமாக கருதுவதுமில்லை. வாழ்க்கையில் அது ஒரு பாகம் என்று நினைத்து பொய் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

உண்மையுள்ள மனுஷன் பரிபூரண ஆசீர்வாதங்களை பெறுவான் என்று நீதிமொழிகள் 28:20ல் வாசிக்கிறோம். ஆசீர்வாதங்கள் இப்படித்தான் வருமே ஒழிய கர்த்தர் உங்களை ஆசீர்வதிக்கிறார் என்று ஊழியக்காரரர் சொல்வதினால் வராது. பொய் பேசுபவர்கள் ஒரு பொய்யை மறைக்க இன்னும் பல பொய்களை சொல்ல வேண்டியிருக்கும். ஆனால் உண்மையை சொன்னால் அப்படி பொய் பேச வேண்டியிராது.

நாம் ஒருவருக்கொருவர் அவயவங்களாக இருக்கிறபடியால் பொய்யை களைந்து பிறனுடனே உண்மையை பேசக்கடவன் என்று பவுல் அப்போஸ்தலன் கூறினதுப் போல உள்ளதை

உள்ளது என்றும் இல்லதை இல்லது என்றும் சொல்லுவோம். அப்படி செய்யும்போது நாம் உண்மையுள்ளவர்களாக இருக்கும்போது பரிபூரண ஆசீர்வாதங்களை பெறுவோம். இந்த லெந்து நாட்களில் தீர்மானம் எடுப்போம், இந்த நாளில் நான் பொய்யே பேசக்கூடாது என்று. அப்படி தினமும் செய்து, இரவில் நம்மை ஆராய்ந்து பார்த்து, பொய் சொல்லாதிருந்தால் கர்த்தருக்கு நன்றி செலுத்துவோம். ஆமென் அல்லேலூயா!

***ஜெபம்:*** எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, பொய்யுரையாத நல்ல தேவனே உம்மை துதிக்கிறோம். எங்கள் வாயிலுருந்தும் எந்த பொய்யும் வராதபடி எங்களை காத்துக் கொள்ள கிருபை செய்தருளும். என்ன பிரச்சனை வந்தாலும் உண்மையே சொல்லுவேன் என்று ஒவ்வொருவரும் தீர்மானித்து அதன்படி நடக்க கிருபை செய்தருளும். பொய்யர்கள் அக்கினிகடலிலே தள்ளப்படுவார்கள் என்று எழுதியிருக்கிறபடியால் பொய்யை சொல்லாமல் எங்களை காத்துக்கொள்ள கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

## 22. யூதாஸின் கால்கள்

*நான் உங்களுக்குச் செய்ததுபோல நீங்களும் செய்யும்படி உங்களுக்கு மாதிரியைக் காண்பித்தேன் - யோவான் 13:15.*

இயேசுகிறிஸ்து சீஷர்களின் கால்களை கழுவின சம்பவத்தை குறித்து நாம் வாசிக்கும்போது, நாம் ஏன் அவர் அப்படி செய்தார் என்று சிலவேளைகளில் பிரசங்கங்களை கேட்டிருப்போம். தாழ்மையை காண்பிக்க அவர் அப்படி செய்தார் என்றுக்கூற கேட்டிருப்போம். அவர் யோவானின் கால்களை கழுவினார், யோவான் இயேசுவுக்கு அன்பான சீஷன் என்று அறிவோம், அதுப்போல பேதுரு, யாக்கோபு உண்மையாக தங்கள் எஜமானைப் பின்தொடர்ந்தவர்கள் என்பதையும் அறிவோம்.

ஒவ்வொரு சீஷரும் ஏதாவது ஒருவகையில் இயேசுவோடு இடைபட்டிருந்தார்கள். ஆனால் இயேசு ஏன் யூதாஸின் கால்களை கழுவினார் என்று எப்போதாவது யோசித்திருக்கிறோமா? இயேசுகிறிஸ்துவுக்கு நிச்சயமாக தெரியும், அவன் உலகத்திலேயே மிகவும் மோசமான நம்பிக்கை துரோகம் செய்து தம்மை காட்டிக் கொடுக்கப் போகிறான் என்று! ஆனாலும் அவனுடைய கால்களையும் அவர் கழுவினாரே!

இந்த உலகத்தையே படைத்த சிருஷ்டிக்கர்த்தரை வெறும் முப்பது வெள்ளிக்காசுகளுக்காக காட்டிக் கொடுக்க போகிறான் என்று அவர் அறிந்தே அவன் கால்களை கழுவினார். எந்த கைகள் இந்த முழு உலகத்தையும் இரட்சிக்க நீட்டப்படப்போகிறதோ அதே கைகளினால், உலகம் இருக்கும்

வரை இயேசுகிறிஸ்துவை காட்டிக் கொடுத்தவன் என்ற பெயரோடு இருக்கப் போகும் பொல்லாத ஒருவனின் கால்களைத்தான் இயேசு கழுவினார்.

இந்த சம்பவத்தின் மூலம் கிறிஸ்து நமக்கு ஊழியம் செய்வதன் விசேஷித்த காரியத்தை கற்றுக் கொடுக்கிறார் என்பது உண்மையல்லவா? நம்மை ஏற்றுக் கொள்கிறவர்களுக்கு மாத்திரமல்ல, நம்மை கவனித்து நம்மோடு இருப்பவர்களுக்கு மாத்திரமல்ல, நாம் நம்மை நேசியாதவர்களுக்கும், நம் கூடவே இருந்து நமக்கு துரோகம் செய்பவர்களுக்கும், நம்மை எதிரியாக நினைப்பவர்களுக்கும் கூட ஊழியம் செய்யவும், சத்தியத்தை எடுத்துக் கூறவும், உதவிகள் செய்யவும் தெரிந்து கொள்ளப்பட்டிருக்கிறோம். 'நான் உங்களுக்கு செய்ததுப் போல நீங்களும் செய்யும்படி உங்களுக்கு மாதிரியை காண்பித்தேன்' என்று இயேசுகிறிஸ்து இதைக் குறித்தல்லவா கூறினார்?

நாம் கடைசியாக யூதாஸைப் போன்ற யாருடைய கால்களை கழுவினோம்? நம்மை நேசிப்பவர்களுக்கு சத்தியத்தை சொல்வது எளிது! ஆனால் நம்மை பகைப்பவர்களுக்கு, நமக்கு துரோகம் செய்பவர்களுக்கு சொல்ல முடியுமா? அவர்களுக்கு நம்மால் இயன்ற உதவிகளை செய்ய முடியுமா? இதற்காகவே நாம் அழைக்கப்பட்டிருக்கிறோம். அப்படி செய்யும்போது நாம் கர்த்தரை பின்பற்றி அவர் செய்ததை நாமும் செய்கிறோம் என்று சொல்ல முடியும். அப்படி நம்மை உண்மையாக தாழ்த்தி கர்த்தர் விரும்பினதை செய்ய கர்த்தர் தாமே நமக்கு உதவி செய்வாராக. ஆமென் அல்லேலூயா!

சீடரின் கால்களை கழுவினவர்
செந்நீரால் என்னுள்ளம் கழுவிடுமே

பாரில் எனக்கு வேறென்ன வேண்டும்
உயிருள்ள வரையில் நின் புகழ் பாட வேண்டும்

**ஜெபம்:** எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, கிறிஸ்து யூதாஸ் தம்மை காட்டிக் கொடுப்பான் என்று அறிந்திருந்தும் அவனுடைய பொல்லாத கால்களை கழுவி, உங்களுக்கு மாதிரியாக செய்தேன் என்று எங்களுக்கு மாதிரியை காண்பித்தாரே அந்த மாதிரியை நாங்கள் பின்பற்றும்படி எங்களை தாழ்த்த கிருபை செய்தருளும். எங்களை நேசியாதவர்களையும், துரோகம் செய்பவர்களையும் நேசிக்க, அவர்களுக்கு ஊழியம் செய்ய உணர்த்தும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

# 23. வாசிக்க சிறந்த புஸ்தகம் வேதம்

*என் வேதத்தின் மகத்துவங்களை அவர்களுக்கு எழுதிக்கொடுத்தேன்; அவைகளை அந்நியகாரியமாக எண்ணினார்கள் - ஓசியா 8:12.*

ருமேனியாவில் கம்யூனிஸ்ட் மற்றும் நாஸ்தீகவாதிகளின் மத்தியில் மிகவும் வைராக்கியமாக ஊழியத்தை செய்து வந்தவர் ரிச்சர்ட் உம்பிராண்ட் என்ற தேவ மனிதர். ருமேனியாவில் ரஷ்ய எல்லை பகுதியில் அவர் ஊழியம் செய்து வந்த போது நடந்த சம்பவம் ஒன்றை காண்போம்.

அது ஒரு பனிக்காலம். பனியோடு மென்மையான சாரல் மழையும், கடுங்குளிரும் சேர்ந்து காணப்பட்டது. அந்நாட்களில் ரஷ்யாவிலிருந்து இருவர் அவரை காணும்படி வந்தனர். அவர்களை வரவேற்ற உம்பிராண்ட் அவர்கள் தன்னை பார்க்க வந்தததின் நோக்கத்தை எண்ணி சந்தோஷப்பட்டார். காரணம், அவர்கள் இருவரும் வேதாகமம் வேண்டும் என கேட்டே வந்திருந்தனர், ருமேனியாவை போல ரஷ்யாவிலும் கிறிஸ்தவர்கள துன்புறுத்தப்பட்டு வந்தனர். இதன் மத்தியிலும் அவர் இரண்டு வேதாகமங்களை அவர்களுக்கு கொடுத்தனுப்பினார். அவர்கள் அதை பெற்று கொண்டு சந்தோஷத்துடன் தங்கள் கிராமத்திற்கு திரும்பினர்.

இரண்டு வாரம் கழித்து அவர்களிடமிருந்து ஒரு நன்றி கடிதம் வந்தது. அக்கடிதத்தின் சில வரிகள் இதோ, 'அன்புள்ள ரிச்சசர்ட் உம்பிராண்ட் அவர்களுக்கு நாங்கள் சுகபத்திரமாக எங்கள் கிராமத்திற்கு வந்து சேர்ந்து விட்டோம். தாங்கள் கொடுத்த வேதாகமம் எங்களுக்கு மிகவும் பயனுள்ளதாக

உள்ளது. அது மாத்திரமல்ல, நாங்கள் சொந்த வேதாகமத்தை வைத்திருப்பதை அறிந்த பக்கத்து கிராம கிறிஸ்தவர்கள் எங்களிடம் வந்து வேதத்தை வாங்கி வாசிக்கின்றனர். இப்படி அநேகர் வந்து கேட்டபடியால் நாங்கள் ஒரு முடிவுக்கு வந்தவர்களாய் தாங்கள் கொடுத்த இரு வேதாகமத்தையும் 32 பகுதிகளாக கிழித்து இப்போது 32 கிராமங்களிலுள்ள ரஷ்ய கிராம மக்கள் வாசித்து பயனடைகின்றனர்' என எழுதியிருந்தது. இதை வாசித்த உம்மிராண்ட் இன்னும் வைராக்கியமாய் ருமேனியாவில் மட்டுமல்ல, ரஷ்யாவிலும் தேவ பணியினை சிறப்பாய் செய்து வந்தார்.

இந்நிகழ்ச்சியை தனது செய்தியில் எழுதிய உம்மிராண்ட தொடந்து கூறியதாவது, 'ஒரு முழு வேதாகமம் தங்களுக்கு கிடைக்காமல் ஏங்குகிற ருமேனியர்களும், ரஷ்யர்களும் மற்றும் அரபு நாட்டு கிறிஸ்தவர்களும் அநேகம் பேர் உண்டு. ஆனால் வேதத்தை கைகளில் வைத்திருந்தும் அதை வாசிக்காத கிறிஸ்தவர்களே நீங்கள் தேவனுடைய நியாய்த்தீர்ப்பில் எப்படி தப்பிக்க முடியும்? என்பதே நான் உங்களுக்கு முன் வைக்கும் கேள்வி' என்று முடித்தார். அக்கேள்வி அவருடைய இருதயத்திலிருந்து வந்தது அல்ல, தேவனுடைய இருதயத்தின் கேள்வியே அது!

பிரியமானவர்களே, இவ்வுலகம் கிறிஸ்தவர்களாகிய நம்மை வேதக்காரரர்கள் என்றே அழைக்கிறது. ஆனால் நம்மில் அநேகர் வேதத்தை வாசிக்காமல் வேஷக்காரரர்க்களாகவே சுற்றி திரிகிறோம். அன்று அந்த ரஷ்யர்க்ள தங்கள் கைகளுக்கு வேதம் கிடைத்த அந்த அரை மணி நேரத்திலோ அல்லது அதிலும் குறைவான நேரத்திலோ எவ்வளவு கருத்தாய் கவனத்துடன், ஜெபத்துடன் வேதத்தை வாசித்திருப்பார்கள் என் ஒரு நிமிடம்

யோசியுங்கள். நீங்கள் என்றாவது அப்படி வாசித்ததுண்டா? வேதத்தை நேரமெடுத்து தியானிப்பதற்கு எது தடையாக இருந்தாலும் அதை தூக்கி எறியுங்கள். கடமைக்காக மேலோட்டமாக வேதத்தை வாசிக்கும் முறைக்கு முற்றுப்புள்ளி வையுங்கள்.

நீதிமொழிகளில் மொத்தம் 31 அதிகாரங்கள் உண்டு. மாதத்தின் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அதிகாரம் வாசிக்கவும், புதிய ஏற்பாட்டில் ஒரு அதிகாரமும், பழைய ஏற்பாட்டில் ஒரு அதிகாரமும் தினமும் வாசிக்க தீர்மானியுங்கள். அந்த தீர்மானத்தை நிறைவேற்ற தேவன் கிருபை செய்வார். அப்படி வாசித்தீர்களானால், உங்கள் வாழ்க்கை முத்தாக மாறி விடும். கர்த்தர் அதிசயமாய் தம்முடைய வார்த்தைகள் மூலம் ஒவ்வொரு நாளும் உங்களை வழிநடத்துவதை காண்பீர்கள். மற்றும் கள்ள போதகர்கள் தவறாய் சொல்லி கொடுப்பதை எளிதாய் இனம் கண்டு கொள்வீர்கள். கவனமாய் உங்கள் கிறிஸ்தவ வாழ்க்கை வாழுவீர்கள். ஆமென் அல்லேலூயா!

உம்மை வருத்தும் வழியில் நடந்தால்
என்னைத் திருத்த வேண்டும் தேவா
கருத்தோடு உமது வசனம்
கற்றுத் தந்து நடத்த வேண்டும்

மகிமை, மாட்சிமை மாவேந்தன் உமக்கே
துதியும் கனமும், தூயோனே உமக்கே
உம்மை நாடித் தேடும் மனிதர்
உம்மில் மகிழ்ந்து களிகூரட்டும்
உந்தன் மீட்பில் நாட்டம் கொள்வோர்
மன அமைதி இன்று பெறட்டும்

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் எங்கள் நல்ல தகப்பனே, என் வேதத்தின் மகத்துவங்களை அவர்களுக்கு எழுதிக்கொடுத்தேன்; அவைகளை அந்நியகாரியமாக எண்ணினார்கள் என்று நீர் அங்கலாய்கிறக்கிற தேவனாக இருக்கிறீரே, நாங்கள் வேதத்தை அந்நிய காரியமாக நினைக்காதபடி, அதிலுள்ள பொக்கிஷங்களை ஆராய்ந்து பார்க்கிறவர்களாக எங்களை மாற்றும். வேதத்தை படித்து நாங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு முத்துக்களாக திகழும்படி எங்களுக்கு கிருபை தாரும். வேதம் வாசிப்பது ஒரு சிலருக்கு மட்டும்தான் என்று நினைத்து, அதை தொடாமல் இருந்த காலங்களை மன்னியும். தினமும் நேரமெடுத்து வேதத்தை வாசிக்க கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 24. வைராக்கியம் வேண்டாம்

வைராக்கியமும் விரோதமும் எங்கே உண்டோ, அங்கே கலகமும் சகல துர்ச்செய்கைகளுமுண்டு - யாக்கோபு 3:16.

1986 ஆம் ஆண்டு, கருங்கடலில் இரண்டு பெரும் கப்பல்கள் ஒன்றோடொன்று மோதிக் கொண்டபோது, பெரும் உயிர்ச்சேதம் ஏற்பட்டது. அந்த விபத்து எப்படி ஏற்பட்டதென்று ஆராய்ந்தபோது அதிர்ச்சி தரும் செய்தி வந்தது.

விபத்து ஏற்பட்டதன் காரணம், பனி மூட்டத்தினாலோ, ரேடார் கருவி இயங்காததினாலோ அல்ல என்றும், மனிதரின் பிடிவாதத்தினாலே என்றும் தெரிய வந்தது. இரண்டு கப்பல்களின் தலைவர்களுக்கும் மற்ற கப்பல் இருப்பது தெரியும் என்றாலும் மோதலை தவிர்க்க வேறு வழி செல்ல இருவருக்கும் விருப்பமில்லாதிருந்தது.

வந்த செய்திகளின்படி இருவரும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்காமல் வழிவிடாமல் அவன் விலகி போகட்டுமே என்று இவரும், இவன் விலகிப் போகட்டுமே என்று அவரும் பெருமையாக இருந்ததன் விளைவு அதிக உயிர்சேதத்திற்கு காரணமாக அமைந்தது. எத்தனையே உயிர்கள் தங்கள் கரங்களில் இருக்கிறது என்று அவர்களில் ஒருவர் நினைத்திருந்தாலும், வைராக்கியத்தை விட்டுக் கொடுத்திருந்தாலும் உயிர்கள் தப்பியிருந்திருக்கும். வைராக்கியமும் விரோதமும் எங்கே உண்டோஇ அங்கே கலகமும் சகல துர்ச்செய்கைகளுமுண்டு.

இதுப் போன்ற வைராக்கியங்களினால் எத்தனையோ உயிர்கள் பலியாகி இருக்கிறது. தங்களின் மத வைராக்கியங்கள், ஜாதி வைராக்கியங்கள், அரசியல் வைராக்கியங்கள், பண வைராக்கியங்கள், பெருமைகள் இவற்றின் மூலமாக கொலை செய்யப்பட்டோர்தான் எத்தனை அதிகம்! தினமும் நாம் செய்தித்தாளில் வாசிக்கிறோமே!

இவைகளுக்கெல்லாம் அடிப்படை காரணம் பெருமையும், சுயநலமுமே! தேவனை எல்லா செல்வாக்கோடும் ஆராதித்து வந்த லூசிபர் விழுந்ததன் காரணமும் சுயநலமும், விரோதமும் எல்லாரும் தன்னை வணங்க வேண்டும் என்கிற பெருமையான எண்ணமும்தான். இதினிமித்தமாக விழுந்து போனவர்கள் ஏராளம் உண்டு.

எந்தெந்த இடத்தில் வைராக்கியத்தை பார்க்கிறோமோ, அங்கே விரோதத்தையும் காண முடியும். அது எங்கெல்லாம் உண்டோ அங்கே கலகமும், சகல துர்ச்செய்கைகளையும் காண முடியும். ஆமான் தன்னை எல்லாரும் வணங்க வேண்டும் என்கிற வைராக்கியத்தை உடையவனாக இருந்தான். மொர்தேகாய் வணங்காத போது, அவன் மேல் விரோதத்தை வளர்த்து கொண்டான். யூதர்களுக்கு விரோதமாக கலகம் செய்து, அவர்களை கொல்ல நினைத்த துர்ச்செய்கையும் கூடவே வந்தது. ஆனால் முடிவோ பரிதாபம், தான் வெட்டின தூக்கு மரத்தில் தானே அழிந்துபோக வேண்டியதாயிற்று.

இந்த லெந்து நாட்களை கடைபிடிக்கிற நமக்கு எந்தவித வைராக்கியமும் இருந்தால் அதை எடுத்துப் போடுவோம். ஜாதியைக் குறித்தோ, மதத்தை குறித்தோ வேறு எந்த காரியத்தை குறித்தோ வைராக்கியமும் விரோதமும் இருந்தால்

*நம்மை தேவ சமுகத்தில் தாழ்த்தி, தேவ ஞானத்தால் நம்மை நிரப்பும்படி அவருடைய பாதத்தில் காத்திருந்து அந்த வைராக்கியத்தை நம்மிலிருந்து எடுத்துப்போடுவோம்.*

*வைராக்கியமோ, விரோதமோ, கலகமோ, சுய நலங்களோ, துர்ச்செய்கைகளோ நம்மிடத்தில் இருந்தால் தேவ இராஜ்யத்தை நாம் சுதந்தரிக்க முடியாது என்பதை உணர்ந்வர்களாக எந்த வைராக்கியமும் இராதபடி நம்மை நாமே ஆராய்ந்து, அந்த துர்க்காரியங்களை நம்மை விட்டு தூர எறிந்து, தாழ்மையையும், அன்பையும் பொறுமையையும் நமக்குள் வளர்த்துக் கொள்வோம். கிறிஸ்து இயேசுவிலிருந்த சிந்தையே நமக்குள் வளரட்டும். ஆமென் அல்லேலூயா!*

*கண்களை பதிய வைப்போம்*
*கர்த்தராம் இயேசுவின் மேல்*
*கடந்ததை மறந்திடுவோம்*
*தொடர்ந்து முன்செல்லுவோம்*

*சூழ்ந்து நிற்கும் சுமைகள்*
*தொடர்ந்து பற்றும் பாவங்கள்*
*உதறி தள்ளிவிட்டு*
*ஓடுவோம் உறுதியுடன்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, சபைக்குள்தான் இந்த நாட்களில் எத்தனை வைராக்கியங்கள் காணப்படுகிறது ஐயா. இந்த வைராக்கியங்களை உடையவர்கள் தங்களை தாழ்த்தி தேவ சமுகத்தில் அவற்றை விட்டுவிட கிருபை செய்தருளும். கிறிஸ்துவிலிருந்த சிந்தையை வளர்த்துக் கொள்ள*

*கிருபை செய்யும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

# 25. அந்தகாரம் வருமுன்

*உம்முடைய இராஜ்யத்தில் வரும்போது அடியேனை நினைத்தருளும் லூக்கா 23:42.*

இயேசுகிறிஸ்து சிலுவையில் அறையப்பட்ட நேரம் மூன்றாம் மணி வேளையாகும். ஆறாம் மணி நேரம் முதல் ஒன்பதாம் மணிநேரம் வரைக்கும் பூமியெங்கும் அந்தகாரம் உண்டாயிற்று. ஒன்பதாம் மணி நேரத்தில் இயேசு ஜீவனை விடடார். காலை ஒன்பது மணி முதல் மத்தியானம் மூன்று மணிவரை இச்சம்பவம் நடைபெற்றது. மொத்தம் ஆறுமணிநேரம் இயேசு சிலுவையில் தொங்கினார். அதில் மூன்று மணி நேரம் அந்தகாரமாக இருந்தது. மீதியிருந்தது மூன்று மணிநேரம்தான்.

ஆரம்பத்தில் அந்த வழியாய் நடந்து போகிறவர்கள், பிரதான ஆசாரியர், வேதபாரகர், அவரோடேக்கூட சிலுவையில் அறையப்பட்டவர்கள் என்று எல்லாரும் அவரை பரியாசம் பண்ணினார்கள். இந்த கேலி கிண்டலுக்கு மத்தியில் இயேசுவானவரின் சாந்தமான வார்த்தைகள் அருகாமையிலுள்ள ஒரு கள்ளனைத் தொட்டது. ஆரம்பத்தில் பரியாசம் பண்ணின அக்கள்வன் 'நாமோ நியாயப்படி தண்டிக்கப்படுகிறோம், நாம் நடப்பித்தவைகளுக்குத் தக்க பலனை அடைகிறோம். இவரோ தகாததொன்றையும் நடப்பிக்கவில்லையே' என்று மற்றவனைக் கடிந்து கொண்டான்.

இநத மூன்று மணி நேரத்தில் இயேசு பிரசங்கம் எதுவும் செய்யவில்லை.இயேசு நடந்து கொண்ட விதத்தில் அந்தக் கள்வன் பிரசங்கம் ஒன்றைப் பார்த்தான். மனமாற்றம் என்ற அற்புதம் நடைபெற்றது. இயேசுவிடம் பரதீஸில் ஒரு இடம்

வேண்டுமென விண்ணப்பம் செய்தான். பாவிகளை இரட்சிக்கவே தான் வந்ததை அந்த கடைசிக் கட்டத்திலும் இயேசுகிறிஸ்து நிரூபித்தார். இச்சம்பவம் நடைபெற்று முடிந்தவுடனே அந்தகாரம் பூமியை சூழ்ந்து கொண்டது. அந்தகாரம் முடியும்போது இயேசு மரித்து விட்டார். இந்தக் கள்வன் சரியான நேரத்தில் அதாவது அந்தகாரம் வரும்முன் தன்கு கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டான். இயேசு மரிக்கும் முன்னர் செய்த கடைசி அற்புதம் என்று இதைக் கூற முடியும்.

நாமும் பரபரப்பான உலகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். மேடையில் செய்யப்படும் பிரசங்கத்தைக் காட்டிலும் வாழ்க்கையில் வாழ்ந்து காட்டும் பிரசங்கம் மிகவும் வல்லமையுள்ளது. நம் வாழ்க்கையைப் பார்த்து சிலர் மனமாற்றமடையலாம். நாம்தான் நடமாடும் வேதம் என்று சொல்வதுண்டு. நம் நடை, உடை, சொல், செயல் எல்லாமே கிறிஸ்துவை வெளிப்படுத்த வேண்டும். அதைப்பார்த்து அநேகர் கிறிஸ்துவிடம் வரமுடியும்.

அதுப் போல எந்த நேரத்தில் நமக்கிருக்கும் வாய்ப்புகள் அந்தகாரப்படும் என்று நமக்கு தெரியாது. எனவே அந்தகாரம் நம் வாழ்க்கையை சூழுமுன்னர் மனம் திரும்பி கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டால் பரதீஸில் நமக்கு நிச்சயம் இடம் உண்டு. அந்தகாரம் வரும் வரை ஏன் காத்திருக்க வேண்டும்! இப்போதே மனம் திரும்புவோமா? நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் இந்தக்காலம் கடைசிக்காலம் என்று கிறிஸ்தவரல்லாதோரும் சொல்கின்றனர். அப்படியிருக்கும்போது, அந்தகாரம் வந்து நம்மை இழுத்து செல்வதற்கு முன் ஒளியாகிய இயேசுகிறிஸ்துவினிடத்தில் வந்துவிட்டால் நம் வாழ்வு ஒளிரும்.

கடைசி நிமிடத்தில் மனம் மாற்றம் கண்ட கள்வனுக்கு கிருபையாக பரதீசு கிடைத்தது. எல்லாருக்கும் அதுப் போன்று வாய்ப்பு கிடைக்கும் என்று யாரும் சொல்ல முடியாது. நமக்கு கிடைத்த இந்த நாட்களிலேயே மனம் திரும்புவோம் அந்த பரதீஸின் வாழ்வு நமக்கும் கிடைக்கும். ஆமென் அல்லேலூயா!

*அற்ப வாழ்வை நித்ய வாழ்வு என்றெண்ணி*
*தற்பரன் தயவை தள்ளிடலாமோ*
*நினையாத நேரம் மரணம் சந்தித்தால்*
*நித்தியத்தை நீ எங்கு கழிப்பாய்?*

*வாசலண்டை நின்று ஆசையாய் தட்டும்*
*நேசர் இயேசுவுக்குன் உள்ளம் திறவாயோ?*

**ஜெபம்:** எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, அந்தகாரமான நாட்கள் வருமுன்பே கர்த்தரை ஏற்றுக் கொள்ள ஒவ்வொருவருக்கும் உணர்த்துவீராக. ஏனோதானோவென்று வாழ்ந்து கொண்டிராமல் நித்தியத்தை எங்கு கழிப்போம் என்ற உணர்வோடு இயேசுகிறிஸ்துவை தங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்ள ஞானத்தை தாரும். எங்கள் வாழ்க்கையும் மற்றவர்கள் கிறிஸ்துவை எங்களில் காணும் விதமாக இருக்க கிருபை செய்யும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

## 26. ஈக்களுக்காக நன்றி

*எல்லாவற்றிலேயும் ஸ்தோத்திரஞ்செய்யுங்கள்; அப்படிச் செய்வதே கிறிஸ்து இயேசுவுக்குள் உங்களைக்குறித்து தேவனுடைய சித்தமாயிருக்கிறது - 1 தெசலோனிக்கேயர் 5:18.*

*கோரி டென்பூம் என்னும் யூத பெண்மணி இரண்டாம் உலகப்போருக்குப்பின் அநேகருக்கு கர்த்தரை வெளிப்படுத்தும் ஒரு கருவியாக தேவன் பயன்படுத்தினார். அவர்களுடைய சாட்சி, அவர்கள் நாசி சித்ரவதை கூடாரத்தில் இருந்தபோதும் கர்த்தர் அவர்களுடைய தேவையை எப்படி சந்தித்தார் என்பதை குறித்தும் இருந்தது.*

*அவர்கள் இருந்த அந்த கேம்ப் மிகவும் அழுக்காக இருந்ததோடு எங்குப் பார்த்தாலும் ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தது. நல்ல வீட்டில் வளர்;ந்திருந்த கோரிக்கு இந்த ஈக்களை பார்த்தபோது அது அருவருப்பாக இருந்தது. ஆனால் அவர்களோடு அந்த கொடிய கேம்பில் இருந்த அவர்களுடைய சகோதரி பெட்ஸி எல்லாவற்றிலும் கர்த்தருக்கு ஸ்தோத்திரம் செலுத்த வேண்டும் என்ற இந்த வார்த்தைகளையே சொல்லுவார்களாம். ஆனால் அப்படி சொல்வது கோரிக்கு மிகவும் கடினமாக இருந்தது.*

*ஒருநாள் கோரிக்கு தெரிய வந்தது, அவர்கள் இருந்த இடத்திற்கு ஜெர்மானிய வீரர்கள் வராதது ஏன் என்று. அவர்கள் வேதத்தை வாசித்து, பாட்டுகள் பாடி கர்த்தரை மகிமைப்படுத்துவதை தடுக்க அவர்கள் வராதது ஏன் என்று கண்டுபிடித்தார்கள். அவர்கள் இந்த ஈக்களின் தொல்லையின் காரணமாக வருவதில்லை என்று கண்டுபிடித்தார்கள். அதனால்*

*சிறைபிடிக்கப்பட்டவர்கள் தேவனை துதிப்பதை அவர்களால் தடுக்க முடியவில்லை. ஈக்கள்கூட தேவனின் கிருபையின் பாத்திரங்களாக தேவனுக்கு நன்றி செலுத்த வைக்கும் கருவியாக இருந்திருக்கிறது!*

*ஒருவர் 'கர்த்தர் ஏன் இந்த கொசுக்களை உண்டாக்கினார்? அவைகள் கடிப்பதோடு அநேக வியாதிகள் வருகிறதே' என்று கேட்டார். அதற்கு மற்றவர் 'அந்த கொசுக்கள் இருப்பதினால் அநேகருக்கு வேலை உண்டாயிருக்கிறது. கொசு வர்த்தி சுருள்கள், கொசு அழிப்பதற்கான மருந்துகள், மலேரியா வந்தால் அதை குணப்படுத்த மருந்துகள் என்று அநேகருக்கு அதினால் வேலைகிடைத்திருக்கிறதல்லவா?' என்று கூறினார். ஆம், அவைகள் இருப்பதினால் இன்று எத்தனைப் பேருக்கு வேலை கிடைத்திருக்கிறது! நாம் எல்லாவற்றிலும் கர்த்தரை துதிக்க வேண்டும்!*

*நம் வாழ்விலும் இருக்கிற ஈக்கள், கொசுக்கள் யாவை? ஒருவேளை அவை பெரிய காரியங்களாக இல்லாமல் மிக சிறிய அளவில் தொந்தரவு செய்கிறவைகளாக இருக்கலாம். ஒருவேளை மேல் வீட்டிலிருந்து பிள்ளைகள் குதிக்கும் சத்தமாக இருக்கலாம், பக்கத்து வீட்டில் நெய்கிறவர்களின் அல்லது தைக்கிறவர்களின் சத்தமாக இருக்கலாம், அவற்றிலிருந்து நாம் தப்பிக்க முடியாதபடி இருக்கலாம். ஆனால் அவைகளின் மூலம் கர்த்தருக்கு நாம் நன்றி சொல்ல முடியுமா? அவைகளின் வழியாக தேவன் நமக்கு ஆவிக்குரிய பொறுமையை கற்றுக் கொடுப்பார்.*

*இதுப்போன்ற சிறுசிறு காரியங்களுக்கு நாம் முறுமுறுக்கும்போது இந்த ஈக்களை நினைப்போம். கர்த்தருக்கு நன்றி சொல்வோம். ஆமென் அல்லேலூயா!*

*பூமியில் வாழ்கின்ற யாவும்*
*அதின் மேலுள்ள ஆகாயமும்*
*வானதூதர் சேனைகள் யாவும்*
*தேவா உம்மைப் போற்றுதே*

*எண்ணில் அடங்கா ஸ்தோத்திரம் - தேவா*
*என்றென்றும் நான் பாடுவேன்*
*இந்நாள் வரை என் வாழ்விலே*
*நீர் செய்த நன்மைக்கே*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, இந்த ஈக்கள் போன்று எங்கள் வாழ்க்கையிலும் எங்களுக்கு கோபத்தை உண்டாக்குகிற சிறுசிறு காரியங்கள் மூலம் நாங்கள் வருத்தப்படாதபடி, எல்லாவற்றிலும் தேவனுக்கு நன்றி செலுத்துகிறவர்களாக எங்களை மாற்றும். அந்த எரிச்சலூட்டும் சிறுகாரியங்கள் மூலமும் எங்களுக்கு நீர் நன்மை வைத்திருப்பதற்காக நன்றி. இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

# 27. உண்மை வழிநடப்போம்

*இதோ, உள்ளத்தில் உண்மையிருக்க விரும்புகிறீர்; அந்தக்கரணத்தில் ஞானத்தை எனக்குத் தெரியப்படுத்துவீர் - சங்கீதம் 51:6.*

ஒரு ஞாயிற்றுக்கிழமை சபையில் போதகர் இந்த வசனத்தை வைத்து போதித்தார். 'நாம் உள்ளத்தில் உண்மையாயிருக்க வேண்டும். எந்த காரியத்திலும் கர்த்தருக்கு முன்பாக உண்மையாயிருக்க பிரயாசப்பட வேண்டும்' என்று பிரசங்கித்தார். அதை கேட்டு கொண்டிருந்த ஒருவர் வீட்டிற்கு சென்றார்.

அடுத்த நாள் அவர் ஒரு ஷாப்பிங் மாலிற்கு சென்று பொருட்களை வாங்கி வந்து, காரில் ஏற்றிக் கொண்டிருந்தபோது, பொருட்கள் வாங்கி வந்த வண்டியின் கீழே ஒரு பெட்டியில் இருந்த பொருளுக்கு பணம் செலுத்தவில்லை என்ற ஞாபகம் வந்தது. பொருட்களை எடுத்து வைத்தபோது அதை மறந்து, கொண்டு வந்தபடியால், அதற்கு பணம் செலுத்தவில்லை.

திரும்ப போய் கியூவில் போய் நின்று பணம் செலுத்தினால் நேரமாகி விடும் என்று பணம் செலுத்தாமலே சென்று விட்டார். அன்று இரவு படுத்திருக்கும்போது, ஆவியானவர் ஞாயிற்று கிழமை போதகர் சொன்ன வார்த்தைகளை நினைவுப்படுத்தினார். அடுத்த நாள் அவர் காலையில் எழுந்து புறப்பட்டு, அந்த கடைக்கு சென்று அந்த பெட்டியை காட்டி, பணத்தை கட்டினார். அங்கு வேலை செய்த பெண் அதை பார்த்து வியந்தவர்களாக, எத்தனை உண்மையுள்ளவர்களாக

இருக்கிறீர்கள் என்று கூறினார். அதை கேட்ட அந்த சகோதரன் கர்த்தரை மகிமைப்படுத்தினார்.

பிரியமானவர்களே கர்த்தர் நம்மிடம் எதிர்ப்பார்க்கும் ஒரு குணாதிசயம் எந்த காரியத்திலும் உண்மையாக இருக்க வேண்டும் என்பதாகும். நாம் எத்தனை உண்மையுள்ளவர்களாக இருக்கிறோம்? கணவன் மனைவியிடம் உண்மையாக இருக்கிறோமா? மனைவி கணவரிடம் உண்மையுள்ளவர்களாக இருக்கிறோமா? நம் வேலை இடத்தில் உண்மையுள்ளவர்களாக இருக்கிறோமா? ஒரு சிறிய காரியத்திலும் நாம் உண்மையுள்ளவர்களாக இருக்கும்போது கர்த்தர் அதை காண்கிறார். அதற்கேற்ற பலனை தருவார்.

உண்மையுள்ள மனுஷன் பரிபூரண ஆசீர்வாதங்களைப் பெறுவான் (நீதி-28:20) என்று வசனம் சொல்கிறதல்லவா? இந்த நாளில் ஆசீர்வாதம் வேண்டும் என்று அதை தேடி எத்தனையோ ஊழியர்களிடமும், போதகர்களிடமும் எனக்காக ஜெபியுங்கள் என்று கேட்கிறவர்கள் அநேகர். ஆனால் உண்மையுள்ள மனுஷன் பரிபூரண ஆசீர்வாதத்தை அல்ல, ஆசீர்வாதங்களை பெறுவான் என்று வசனம் சொல்கிறது.

வேதத்தில் தங்கள் உயிரே போனாலும் கர்த்தருக்காக உண்மையாக இருப்போம் என்று சொன்ன ஒருவரின் உயிரும் போகவில்லை, ஆனால் மாறாக, அவர்கள் தாங்கள் இருந்த நிலையிலிருந்து உயர்த்தப்பட்டதை காண்கிறோம். உதாரணம், யோசேப்பு, தானியேல், சாத்ராக், மேஷாக், ஆபெத்நேகோ போன்றவர்கள். அடிமைகளாக இருந்த அவர்களை கர்த்தர் பெரிய இடத்திற்கு உயர்த்தினாரல்லவா? காரணம் அவர்களிடத்தில் காணப்பட்ட உண்மையே!

*நம் வேலையிடத்தில் நாம் உயர்த்தப்பட லஞ்சம் கொடுக்க வேண்டியதில்லை, உயர் அதிகாரிகளில் கால்களை பிடிக்க வேண்டியதில்லை. நம் வேலைகளில் உண்மையாக இருப்போம். கர்த்தர் ஏற்ற வேளையில் நிச்சயமாக உயர்த்துவார். நம் குடும்பத்தில், நம் சபைகளில், நம் நண்பர்களிடத்தில், நம் பேச்சில், நம் செயல்களில், நம் சிந்தனைகளில் எதிலும் உண்மையாக இருப்போம். கர்த்தருடைய பரிபூரண ஆசீர்வாதத்தை பெறுவோம். ஆமென் அல்லேலூயா!*

*கரம் பற்றி நடந்திடுவேன்*
*கர்த்தர் இயேசுவில் மகிழ்ந்திடுவேன்*
*அவர் காட்டும் வழியில் உண்மையாய் நடந்து*
*ஆவியில் மகிழ்ந்திடுவேன்*

*இராஜாதி இராஜாவுக்கே மகிமை*
*இயேசு இராஜனுக்கே*

*நெருக்கங்கள் வரும்போது*
*நேசர் என் பட்சமுண்டு*
*துதித்திடுவேன் என்றும் புகழ்ந்திடுவேன் அவர்*
*நாமத்தில் ஜெயமெடுப்பேன்*
*இறங்கிடும் தேவ ஆவியே என்னை*
*நிரப்பிடும் வல்ல ஆவியே*

***ஜெபம்:*** *எங்கள்அன்பின் பரலோக தகப்பனே, எங்களை அழைத்த தேவனாகிய நீர் உண்மையுள்ளவராக இருக்கிறீரே, உண்மையுள்ள தேவனாகிய உம்மை நேசிக்கிற நாங்களும் எல்லா காரியங்களிலும் உண்மையாயிருக்க உதவி செய்யும்.*

உம்மிடத்திலிருந்து ஆசீர்வாதங்களை பெற்றுக் கொள்ள கிருபை செய்யும். எங்களை காண்கிறவர்கள் உண்மையுள்ள தேவன் எங்களுக்குள் இருப்பதை அறிந்து கொள்ள கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

## 28. ஏற்றுக் கொள்ள வேண்டுமே

அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக்கொண்டவர்கள் எத்தனைபேர்களோ, அத்தனைபேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரங்கொடுத்தார் - யோவான் 1:12.

ஆண்ட்ரூ ஜேக்சன் அவர்கள் அமெரிக்க அதிபராக இருந்தபோது, ஒரு மனிதனுக்கு அவன் செய்த குற்றத்தினிமித்தம் மரண தண்டனை விதிக்கப்பட்டது. அதிபர் ஜேக்சன் அவர்கள் அவனை மன்னித்து, விடுதலை வழங்கினார். ஆனால் அந்த மனிதனோ அந்த மன்னிப்பை ஏற்க மறுத்து விட்டான்.

ஜெயில் அதிகாரிகள், வழக்கறிஞர்கள், அவனுடைய குடும்பத்தினர் மற்றும் பலரும் அவனிடம் வந்து அந்த மன்னிப்பை ஏற்றுக் கொள்ளும்படி வற்புறுத்தினர். அவர்கள் அந்த மன்னிப்பு அவன் ஏற்றுக் கொள்ளாவிட்டால் அவன் உயிர் போவதுமின்றி, அந்த மன்னிப்பை வழங்கிய அதிபருடைய பெயருக்கே களங்கம் விளைவிக்கும் என்றும் எடுத்துக் கூறினர். ஆனால் அவனோ எதற்கும் பணியவில்லை.

கடைசியில் சுப்ரீம் கோர்ட் வரை எடுத்து சென்றபோது, கோர்ட் இறுதி தீர்ப்பு வழங்கியது. ஒரு மனிதன் மன்னிப்பை ஏற்றுக்கொள்ளாத வரைக்கும் அந்த மன்னிப்பு செல்லுபடியாகாது என்று தீர்ப்பு வழங்கியது.

அதுப்போலத்தான் தேவனின் இரட்சிப்பின் திட்டமும். இயேசுகிறிஸ்து மனுக்குலத்திற்காக மரித்து, அவர்களுக்காக

இரட்சிப்பை ஏற்படுத்திக் கொடுத்திருந்தாலும், அதை ஏற்றுக்கொள்கிறவர்கள் மாத்திரமே இரட்சிக்கப்படுவார்கள்.

நாம் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்ளாத பட்சத்தில் நம்முடைய பாவங்களுக்கான நியாயத்தீர்ப்பை நாம் சந்திக்கவே வேண்டும். அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; விசுவாசியாதவனோ, தேவனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாயிராதபடியினால், அவன் ஆக்கினைத்தீர்ப்புக்குட்பட்டாயிற்று (யோவான் 3:18) என்று இயேசுகிறிஸ்து கூறினார். அவரை விசுவாசிக்காவிட்டால் அது எத்தனை பயங்கரமாயிருக்கும்!

அதிபர் கொடுத்த அந்த மன்னிப்பை மறுத்த அந்த குற்றவாளியைப் போல தேவன் நம் ஒவ்வொருவருக்கும் இலவசமாக கொடுத்த இரட்சிப்பை ஏற்றுக் கொள்ளாமல் அது கிறிஸ்தவர்களுக்கு மட்டும்தான், அது கிறிஸ்தவ கடவுள் என்று அந்த மன்னிப்பை ஏற்றுக் கொள்ளாமல் ஆக்கினைத் தீர்ப்பை பெற்று அதன் விளைவுகளை அனுபவிப்பது எத்தனை மடத்தனமாயிருக்கும்?

கிறிஸ்தவம் என்பது மதமல்ல, அது ஒரு வழிகாட்டி, அல்லது ஒரு மார்க்கம். அது முழு உலகத்திற்கும் சொந்தம். ஒரு குறிப்பிட்ட மதத்தினருக்கு மாத்திரமல்ல, அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக்கொண்டவர்கள் எத்தனைபேர்களோ, அத்தனைபேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரங்கொடுத்தார் என்று வசனம் சொல்லுகிறதே! யார்

*விசுவாசித்தாலும் அவர்கள் தேவனுடைய பிள்ளைகளாவார்கள். பட்சபாதமே இல்லை. அல்லேலூயா!*

*கர்த்தர் கொடுக்கும் இலவச இரட்சிப்பை ஆவலோடு பெற்றுக் கொள்வோம். அவரை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்வோம். இரட்சிப்பதற்கு அவருடைய கரங்கள் நீட்டப்பட்டே இருக்கிறது. ஆமென் அல்லேலூயா!*

*இரத்தம் சிந்துதல் இல்லாமல் மன்னிப்பில்லை*
*இயேசு நாமம் சொல்லாமல் மீட்பு இல்லை*
*கூப்பிடு இயேசு இயேசு என்று - உன்*
*குறைகளெல்லாம் நிறைவாக்கி நடத்திடுவார்*

*துன்பமா துயரமா அது தண்ணீர்*
*பட்ட உடை போன்றதம்மா*
*காற்றடித்தா வெயில் வந்தா*
*காய்ந்து போகும் கலங்காதே*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, மன்னிப்பை யாரும் வற்புறுத்த முடியாததுப் போல இரட்சிப்பையும் யாரையும் வற்புறுத்தி கொடுக்க முடியாதே, அவர்களாக கர்த்தர் அருளும் இரட்சிப்பை ஏற்றுக் கொள்ளும்படியாக தேவன் தாமே அவர்கள் இருதயங்களில் கிரியை செய்வீராக. இரட்சிப்பு இலவசமாக இருந்தாலும் அதை ஏற்றுக் கொள்ளும் பக்குவம் அனைவருக்கும் இல்லாதபடியால் ஆவியானவர்தாமே கிரியை செய்து, அவர்களுடைய இருதயங்களில் உணர்த்தும். இயேசுகிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ள*

கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

# 29. அழியாத ராஜ்ஜியம்

*நகைப்பிலும் மனதுக்குத் துக்கமுண்டு; அந்த மகிழ்ச்சியின் முடிவு சஞ்சலம் - நீதிமொழிகள். 14:13.*

தாவீது ராஜாவைப்பற்றியும், சாலமோன் ராஜாவைப்பற்றியும், அநேக சுவாரஸ்யமான கதைகள் சொல்லப்படுவதுண்டு. ஒரு நாள் தாவீது ராஜா ஒரு கனவுக் கண்டாராம். அதில் ஒரு மோதிரத்தைக் கண்டார். அதை அணிந்தவுடன், அது, துக்கமுள்ள மனுஷனை மகிழ்ச்சியுள்ளவனாக்கவும், மகிழ்ச்சியுள்ள மனிதனை துக்கமுள்ளவனாக்கவும் மாற்றிற்று.

அடுத்த நாள் தூங்கி எழுந்தவுடன், அரண்மனையின் நகை செய்பவரை அழைத்து, அதே மாதிரி ஒரு மோதிரத்தை செய்யச் சொல்லி கட்டளையிட்டார். தன்னுடைய வாழ்க்கையின் நெருக்கமான நேரங்களில், அதை அணிந்து, சமாதானம் அடையப் போவதாகக் கூறி சீக்கிரமாய் அதைச் செய்யச்சொல்லி கட்டளையிட்டார்.

அதைக் கேட்டு அந்த நகை செய்பவர், தன்னால் எப்படி அந்த மாதிரி மோதிரத்தை செய்ய முடியும்? என்று கலங்கியவராக, தன் வீட்டிற்குச் சென்றுக் கொண்டிருந்தார். அப்போது வழியில் இளவரசன் சாலமோனைக் கண்டார். சாலமோனும் அவரைக் கண்டு, 'ஏன் இப்படி, கவலையோடு போய்க் கொண்டிருக்கிறீர்' என்றுக் கேட்டார். தட்டான் நடந்ததைக் கூறியவுடன், 'இதற்குப் போயா கலங்குகிறீர்கள்? ஒரு சாதாரண மோதிரத்தை உண்டாக்கி, அதன்மேல் "இதுவும் கடந்துப் போகும்" என்ற எழுத்துக்களை பதித்து விடுங்கள், ராஜா அதை அணிந்து தன்னுடைய சோக சூழ்நிலையில்

அதைக் காணும்போது, இது சீக்கிரமாய் கடந்துப் போய் விடும் என்று மகிழ்ச்சி அடைவார். அதே சமயம், மகிழ்ச்சியாயிருக்கும்போது இதைப் பார்த்தால் இந்த மகிழ்ச்சி கடந்துப்போகும் என்று துக்கமடைவார்'' என்றுக் கூறினார்.

அப்படியே அந்தத் தட்டானும் செய்து தாவீது ராஜாவிடம் கொடுத்தபோது, அவர் மகிழ்ச்சியடைந்து, அவருக்கு பரிசுகளை வழங்கினார். மட்டுமல்ல, தன் மகனின் புத்திக் கூர்மையை பாராட்டினார்.

நாம் வாழும் வாழ்க்கை மிகக் குறுகியது. இந்த உலகமும் அதன் ஆசை இச்சைகளும் ஒரு நாள் அழிந்துப் போய் விடும். ஆனால் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் மேல் நாம் வைக்கும் நம்பிக்கை இந்த உலகத்திற்கு மாத்திரமல்ல, நாம் நித்தியமாய் வாழப்போகும் பரலோக ராஜ்ஜியத்திற்கும், நம்மைக் கொண்டு சேர்த்து வாழ வைக்கும். சமீபத்தில் நான் ஒருச் செய்தியைக் கேட்டுக் கொண்டிருந்தபோது செய்தியாளர் சொன்னார், 'என்னவோ நாம் யுகயுகமாய் இந்த உலகத்தில் வாழப் போகிறதுப் போல நம் உடல்நிலை சரியில்லையென்றால், கோடிக் கோடியாய் பணத்தை இறைத்து, சரிப்படுத்தப் பார்க்கிறோம். ஆனால் நித்திய நித்தியமாய் மறுமையில் வாழப் போகும் வாழ்க்கையைக் குறித்து சிறிதளவும் கவலையின்றி வாழ்ந்துக் கொண்டிருக்கிறோம்' என்று. அது எத்தனை உண்மை!

எல்லாமே கடந்துப் போகிறவைகள்தான். எதுவும் நித்திய நித்தியமானவை அல்ல, நாம் படுகிற பாடுகள், வறுமைகள் கஷ்டங்கள், துன்பங்கள் எதுவுமே நிரந்தரமல்ல, எல்லாமே கடந்துப் போகும். ஆனால் நாம் கிறிஸ்துவோடு வாழப் போகும் வாழ்க்கையே நிரந்தரம். அதற்காகவே அவர் இந்த உலகத்திற்கு

வந்து தம் சொந்த ஜீவனையும் இரத்தத்தையும் சிலுவையிலே சிந்தி, நமக்கு இரட்சிப்பை இலவசமாக கொடுத்து, நமக்காக ஒரு வீட்டையும் கட்ட பரலோகத்திற்குச் சென்றிருக்கிறார். 'என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; அப்படியில்லாதிருந்தால், நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம் பண்ணப்போகிறேன். நான் போய் உங்களுக்காக ஸ்தலத்தை ஆயத்தம்பண்ணினபின்பு, நான் இருக்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்படி, நான் மறுபடியும் வந்து உங்களை என்னிடத்தில் சேர்த்துக்கொள்ளுவேன்' (யோவான் 14:2,3) என்றுச் சொல்லிச் சென்றவர் சீக்கிரம் வரப் போகிறார். வந்து நம்மைக் கூட்டிச் செல்லப் போகிறார். அவருடைய வருகைக்காக காத்திருந்து, பரிசுத்தமாய் வாழ்ந்து அவரோடு ஆயத்தமாகி செல்வோமாக. ஆமென் அல்லேலூயா!

மோட்ச யாத்திரை செல்கிறோம் மேலோக வாசிகள்
மாயலோகந் தாண்டியே எம் வீடு தோன்றுதே
கடந்து செல்கிறோம் கரையின் ஓரமே
காத்திருந்து ராஜ்ஜியம் கண்டடைவோம்

**ஜெபம்:** எங்களை நேசிக்கிற எங்கள் நல்ல தகப்பனே, இந்த மாய உலகம் கட்ந்துப் போகும், இதன் மகிழ்ச்சியும், துக்கமும் கடந்துப் போகும். ஆனால் மாறாத எங்கள் நேசரோ, எங்களோடு என்றும் துணையாக இருந்து எங்களை நித்திய, அழியாத ராஜ்ஜியத்திற்கு கொண்டுச் சேர்க்கப் போகிற தயவுக்காக உம்மை ஸ்தோத்திரிக்கிறோம். அதற்கென்று எங்களை ஆயத்தப்படுத்த எங்களுக்கு உதவிச் செய்யும். இயேசு

*கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 30. குணமாக்கும் தேவன்

*நம்முடைய மீறுதல்களினிமித்தம் அவர் காயப்பட்டு, நம்முடைய அக்கிரமங்களினிமித்தம் அவர் நொறுக்கப்பட்டார்; நமக்குச் சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்தது; அவருடைய தழும்புகளால் குணமாகிறோம் - ஏசாயா 53:5.*

டாக்டர் வில்லியம் ஜேம்ஸ் என்பவர் பிரபல மனநோய் மருத்துவ நிபுணர். இவர் ஹார்வேர்ட் பல்கலைக்கழகத்தில், (Harvard University) பேராசிரியராக பணியாற்றினார். திடீரென்று அவர் ஒரு மர்ம நோயால் தாக்கப்பட்டார். நரம்பு மண்டலம் முழுவதும் தளர்ச்சியடைந்து சரீரம் செயலிழந்தது. மருத்துவர்களால் அவரை சுகமாக்க முடியவில்லை. அவர் மருத்துவத்தில் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தபடியால், மருத்துவர்களின் இயலாமை அவரை மிகுந்த அதிர்ச்சிக்குள்ளாக்கியது. உலகில் நரம்பு தொடர்பான நிபுணர்கள் எங்கெங்கு உண்டோ, அவர்கள் அவரை குணமாக்க அழைக்கபட்டனர். ஆனால் ஒரு பலனுமில்லை. தான் வாழ்ந்து என்ன பயன் என்று அவர் நினைக்க ஆரம்பித்தார்.

டாக்டரின் இந்நிலை குறித்து அறிந்த ஒரு தேவ ஊழியர் அவரை சந்தித்தார். இவர் சுகமளிக்கும் வரத்தை பெற்றவர் அல்ல. சாதாரண மனிதரான அந்த ஊழியர், ஜெபிக்குமுன், இயேசுகிறிஸ்துவைக் குறித்தும், அவர் அளிக்கும் தெய்வீக சுகத்தைக் குறித்தும் பேசினார். டாக்டருக்கோ நம்பிக்கை வரவில்லை. எனினும் அவருடைய அனுமதியுடன் தலையின் மீது கை வைத்து ஜெபித்தார். உடனே, மின்சாரம் போன்ற வல்லமை என் உடலுக்குள் பிரவேசித்து செயல்படுகிறதை நான்

உணர்ந்தேன். என் நரம்புகள் பெலப்படுகிறதை அறிகிறேன். நான் குணமாகிறேன் என்று உற்சாகமாக கூறிக்கொண்டே அவர் அற்புதமாக சுகமடைந்தார். அன்றே இயேசுவுக்கு தன் வாழ்வை அர்ப்பணித்தார்.

மருத்துவர்களால் கூடாத காரியம் நம் இயேசுவால் கூடும். பொதுவாகவே நாம் மருந்து மாத்திரைகள் மீது நம்பிக்கை வைக்கிறோம். மருந்துகளை எடுப்பது தவறல்ல. வேதத்திலே எசேக்கியா ராஜாவின் புற்றுநோய் குணமாக அத்திப்பழ அடையை போடும்படி தேவனே கூறுகிறார். இருப்பினும் நமது நம்பிக்கையை மருந்துகளின் மேல் வைக்காமல், எல்லாவித மருந்துகளையும் கண்டுபிடிக்க மனிதனுக்கு ஞானம்கொடுக்கும் தேவன் மேலேயே வைப்போம். டாக்டர் கொடுக்கும் மருந்தை சாப்பிடுங்கள். சுகத்தை தேவனிடமிருந்து எதிர்பாருங்கள். அவரே நம்மை குணமக்க வல்லவர்.

இன்றும் நம்மில் அநேகர் தீராத வேதனையோடும், குணமடையாத வியாதியோடும் வாழ்ந்துக் கொண்டிருக்கலாம். இருந்த பணத்தையெல்லாம் மருத்துவத்திற்கு செலவழித்தும் வியாதி நீங்காமலிருக்கலாம். இயேசுகிறிஸ்துவை நம்பி வாருங்கள். அவர் குணமாக்கும் கர்த்தர். அவர் சிலுவையில் பட்ட காயங்களின் தழும்புகளால் குணமாகிறோம் என்று வேதம் நமக்கு கூறுகிறது. அவரிடம் வந்த அநேகர் முற்றிலும் சுகமானார்கள். இன்றும் அதே தேவனாய் மாறாதவராக குணப்படுத்திக் கொண்டிருக்கிறார். அவருடைய நாமங்களில் ஒன்று யெகோவா ரஃபா. அப்படியென்றால் குணமாக்கும் கர்த்தர் என்று அர்த்தமாகும். 12 வருடமாய் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீ இயேசுவின் வஸ்திரத்தின் ஓரத்தை தொட்டால் நான் குணமாவேன் என்று விசுவாசித்து தொட்டாள். அந்த கணமே

அவள் குணமானாளே! 38 வருடமாய் படுத்த படுக்கையாய் கிடந்த திமிர்வாதக்காரனை இயேசு கண்டு அவன் வெகுநாளாய் வியாதிப்பட்டவன் என்று அறிந்து அவனை சுகமாக்கினாரே! அதே தேவன் இன்றும் மாறாதவராயிருக்கிறார். நாம் படும் வேதனைகளை அறிந்த தேவன் நம் தேவன். நாம் படுகிற துன்பங்களை காண்கின்ற தேவன். அவருடைய தழும்புகளால் நம்மை குணமாக்கிற தேவன். அல்லேலூயா!

என்னுடைய Tail Bone என்னும் எலும்பு வளைந்து, என்னால் உட்கார முடியாமல் மிகவும் வேதனைப் பட்டேன். எலும்பு சிகிச்சை நிபுணர்கள் ஆபரேஷன் பண்ண வேண்டும் என்று சொல்லி விட்டார்கள். அந்த சமயத்தில் அருமையான ஒரு தேவ ஊழியர் எனக்காக ஜெபித்தார். தேவன் கிருபையாய் என்னைத் தொட்டு என்னை சுகப்படுத்தினார். நான் பரிபூரண சுகத்தை பெற்றுக் கொண்டேன். இன்று வரை எனக்கு எந்த பிரச்சனையும் இல்லை. கர்த்தர் எனக்கு பரிபூரண சுகத்தை ஒரு வருடமாய் பட்டிருந்த கஷ்டத்தை ஒரு நிமிடத்தில் குணமாக்கினார். அல்லேலூயா! உங்கள் வியாதிக்கூட எலும்பில் இருக்கலாம், தோலில் இருக்கலாம் உடல் உறுப்புகளில் இருக்கலாம், எந்த இடத்தில் இருந்தாலும், விசுவாசத்தோடு ஜெபியுங்கள். கர்த்தர் உங்களுக்கும் சுகத்தைத் தருவார். ஆமென் அல்லேலூயா!

உம்மால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை
எல்லாமே உம்மால் ஆகும் இயேசுவே
சொல்லி முடியாத அற்புதம் செய்பவர் நீரே
எண்ணி முடியாத அதிசயம் செய்பவர் நீரே

எனக்கு குறித்ததை நிறைவேற்றி முடிப்பவர் நீரே

எனக்காக யாவையும் செய்து முடிப்பவர் நீரே
அப்பா உமக்கு ஸ்தோத்திரம்
அன்பே உமக்கு ஸ்தோத்திரம்

**ஜெபம்:** எங்களை குணமாக்க வல்லமையுள்ள எங்கள் யெகோவா ரஃபாவே உம்மைத் துதிக்கிறோம். இந்த வேளையிலும் யார் யார் என்ன வேதனையோடு இருக்கிறார்களோ, அவற்றை நீh கண்டும் அறிந்தும் இருக்கிறதற்காக உமக்கு ஸ்தோத்திரம். அப்பா அவர்களை தொட்டு சுகமாக்கும் தேவனே. உம்மால் கூடாத காரியம் ஒன்றுமில்லையே. வைத்தியர்களால் முடியாதது உம்மாலே ஆகுமே. தொட்டு சுகமாக்கும் ஐயா. கண்ணீரைத் துடைத்தருளும். வேதனைகளை மாற்றும். அவர்களுடைய தேவைகளை சந்தித்தளும். நீர் சுகமாக்கும் தேவன் என்பதை அவர்கள் அறிந்து உம்மை துதிக்க கிருபைச் செய்தருளும். நீர் அப்படி செய்வதற்காக உமக்கு நன்றி. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

# *31.* கிறிஸ்துவின் மாதிரி

*நான் உங்களுக்குச் செய்ததுபோல நீங்களும் செய்யும்படி உங்களுக்கு மாதிரியைக் காண்பித்தேன் - யோவான் 13:15.*

*இலங்கையில் ஒரு புத்த குடும்பத்தில் பிறந்தவர் வீரசூர்யா. இளம் வயதில் ஒரு ஆலய ஆராதனையில் கலந்து கெண்ட போது, கிறிஸ்துவை தன் சொந்த இரட்சகராக ஏற்று கொண்டார். அப்போது இவருக்கு வயது 25. தன் இருதயத்தில் நிறைந்த இயேசுவை தன் நணபர்களுக்கு அறிவிக்க தொடங்கினார். அநேகர் இவர் மூலம் இரட்சிக்கப்பட்டனர். இரட்சண்ய சேனை என்ற இயக்கத்தில் உறுப்பினராக இணைந்த இவர் அன்பையே ஆதாரமாக கொண்டு கிறிஸ்துவை போல் வாழ்ந்து காட்டினார்.*

*புத்த வாலிபர்கள் சிலர் இவர் கிறிஸ்தவத்தை பரப்புவதன் நிமித்தம் இவர் மேல் எரிச்சலுற்று, இவரை கொலை செய்ய வகை தேடினர். அதை அறிந்த சூர்யா அவர்களை ஒரு நாள் அடர்ந்த காட்டிற்குள் வரவழைத்தார். தான் கையில் எடுத்து சென்ற கயிற்றை அவர்களிடம் கொடுத்து, ஒரு மரத்தில் தன்னை கட்டச் சொன்னார். பின்னர் கத்தியை அவர்களிடம் கொடுத்து, தன்னை அவர்கள் விருப்பதிற்கு வெட்ட சொன்னார். அவர்களோ காரணமின்றி சூர்யாவை பகைத்ததை எண்ணி வெட்கி மன்னிப்பு கேட்டனர்.*

*150 ஐரோப்பியருக்கும், 150 இந்தியருக்கும் தலைவராக சில காலம் பணியாற்றினார். ஒரு முறை இரு வேலையாட்களுக்கு இடையே சண்டை ஏற்பட்டது. நீ பெரியவனா, நான் பெரியவனா என்ற சண்டை அது. இறுதியில் இவ்வழக்கு*

*சூர்யாவிடம் வந்தது. வேலையாட்கள் இருவரையும் அழைத்தார். அவர்களை உட்கார வைத்து அவர்களின் கால்களை கழுவ ஆரம்பித்தார். அவர்களோ வேண்டவே வேண்டாம் என்று கண்ணீர் விட்டனர். இருப்பினும், சூர்யாவின் செயலால் அவர்களின் மனம் மெழுகு போல உருகியது. கண்ணீரோடு அவர்கள் தங்கள தவறை உணர்ந்து, பெரியவர் சிறியவர் என்ற சண்டையை மறந்து சகோதரர் ஆயினர்.*

*இவர் தன் வாழ்நாளெல்லாம் அன்பையே ஆதாரமாக கொண்டு கிறஸ்துவைப்போல வாழ்ந்து காட்டினார். அன்று இயேசுவுடன் இருந்த 12 பேரும் வெவ்வேறு விதங்களில் குறையுள்ளவர்களாகவே இருந்தனர். ஆனாலும் இயேசு அவர்களுக்கு பொறுமையை கற்று கொடுத்து, அன்பாய் தவறுகளை சுட்டி காடடினார். அவர்களுக்கும் யார் பெரியவன் என்ற எணண்ம் மேலோங்கியபோது 'உங்களில் தலைவனாயிருக்க விரும்புகிறவன் யாவருக்கும் பணிவிடைக்காரனாயிருக்கக்கடவன் என்றார். அவர் தாம் மரிப்பதற்கு முன்பதாக, தன்னை காட்டி கொடுக்கபோகிறவனையும், தன்னை மறுதலிக்க போகிறவனையும் அன்போடு கால்களை கழுவி தன் வஸ்திரத்தால் துடைத்து தாழ்மையையும் அன்பையும் வெளிப்படுத்தினார்.*

*நாம் பிறரது தவறகளை திருத்தும் முயற்சியில் எவ்வாறு நடந்து கொள்ளுகிறோம்? பிள்ளைகளிடமோ, பணியாளரிடமோ, குடும்ப உறுப்பினர்களிடமோ நாம் நடந்து கொள்ளும் விதம் எப்படி? நீதிபதியாய் தீர்ப்பிடுவது எளிது, நிதானமாய் அன்போடு எடுத்து கூறுவது கடினமே. பொதுவாக*

*பிறருக்கு அட்வைஸ் பணணுவது என்றால் எல்லாருக்கும் பிடித்ததே.*

*தவறு செய்தவர்களை குற்றவாளியாக கண்டு ஒதுங்கி விடுவதும், நம்மை பரிசுத்தவான்களாக காண்பிப்பதும் நமக்கு பிடித்ததே. ஆனால் அவர்களிடம் அன்புசெலுத்துவதென்பது நம்மால் இயலாத காரியம். ஆனால் அடிக்கு அடிபணியாதவர் அன்பிற்கு அடிபணிவர் என்பது பழமொழி. கடிந்து கொள்வது மிக அவசியமே, பிரம்பை கையில் எடுப்பது மிக தேவையானதே. ஆம் பிரம்பை கையாடாதவன் தன் மகனை பகைக்கிறான் என கூறும் வசனம், அதோடு முடிந்து விடாமல், அவன் மேல் அன்பாயிருக்கிறவனோ அவனை ஏற்கனவே தண்டிக்கிறான் என முடிகிறது. அன்பே இவ்வுலகில் சிறந்தது, உயர்ந்தது. அந்த அன்பை அனைவரிடமும் காட்டிய இயேசுவின் முன்மாதிரியை வாழ்ந்து, வார்த்தையிலல்ல, வாழ்வில் பிறரை ஆதாயப்படுத்துவோம். ஆமென் அல்லேலூயா!*

*தொடும் என் ஆண்டவரே*
*தொடும் என் வாழ்வினையே*
*இயேசுவே உம்மைப் போல்*
*என்னை மாற்றிடுமே*

***ஜெபம்:*** *எங்களை நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, எங்களை ஒவ்வொருவரையும் கிறிஸ்துவை போல மாற்றுமே. கிறிஸ்துவின் சிந்தை எங்கள் ஒவ்வொருவருக்கும் வர வேண்டுமே. நாங்கள் செய்கிற ஒவ்வொரு காரியத்திலும் உம்மை வெளிப்படுத்த எங்களுக்கு கிருபை தர வேண்டுமே. கிறிஸ்துவின அன்பு எங்கள் உள்ளங்களில் கடந்து வர வேண்டுமே. இந்த*

உலகத்தில் அன்பற்று இருப்பவர்களுக்கு உமது அன்பை வெளிப்படுத்த எங்களை பயன்படுத்துமே. எங்களை காண்கிறவர்கள் கிறிஸ்துவை காண கிருபை செய்யுமே. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

# 32. சரீரமாகிய ஆலயம்

*உங்கள் சரீரமானது நீங்கள் தேவனாலே பெற்றும் உங்களில் தங்கியும் இருக்கிற பரிசுத்த ஆவியினுடைய ஆலயமாயிருக்கிறதென்றும், நீங்கள் உங்களுடையவர்களல்லவென்றும் அறியீர்களா? கிரயத்துக்குக் கொள்ளப்பட்டீர்களே; ஆகையால் தேவனுக்கு உடையவைகளாகிய உங்கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியினாலும் தேவனை மகிமைப்படுத்துங்கள் - 1 கொரிந்தியர் 6:19-20.*

*நம்மில் அநேகர், அளவுக்கு மீறி வேலைகளை செய்து, மிகவும் சோர்ந்து, களைப்படைந்துப் போகிறோம். ஒரேயடியாக வேலை வேலை என்று அதிலேயே கவனமாக இருப்பதால் நம் சரீரத்தைக் குறித்து கவலையற்றவர்களாக காணப்படுகிறோம்.*

*நம்முடைய ஆவிக்குரியக் காரியங்களும், உணர்ச்சிகளுக்குரிய, சிந்தனைகளுக்குரிய காரியங்களும் நம் சரீரத்தோடு இணைக்கப்பட்டிருக்கிறது. நம் சரீரத்தை கவனமாக பராமரிக்கத் தவறும் போது, நம் சரீரம்மாத்திரமல்ல, நம்முடைய எல்லா சிந்தனை, உணர்ச்சி, ஆவிக்குரிய வகைகளிலும், நோய்வாய்ப்பட்டுப் போகிறோம். இந்நாட்களில் தொலைக்காட்சிகளில் நம் உடல்நிலையைக் குறித்த அநேக மருந்தகளையும், உடற்பயிற்சி கருவிகளையும், குறித்த விளம்பரங்களையும் காண்கிறோம். அந்த விளம்பரங்களைப் பார்த்து, வாங்கி, சரீரத்தின் தோல் சுட்டுக் கொண்டதுதான் மிச்சம்!*

*நாம் சற்று யோசித்துப் பார்ப்போம், நாம் எந்த அளவு நம்முடைய சரீரத்தை கவனமாக காத்துக் கொளகிறோம் என்று? நாம் தேவையான அளவு தண்ணீரைக் குடிக்கிறோமா? வேலை வேலை என்று தண்ணீர் குடிக்கக் கூட நேரமில்லை என்றுக் கூறுகிறோமா? எத்தனையோ வியாதிகளுக்கு, தண்ணீர் குடிப்பதே மருந்தாக இருக்கிறது! ஏன், உடல் பருமனைக் குறைக்கவும் கூட தண்ணீர் அதிகமாக உதவுகிறது. சாப்பிட வேண்டிய உணவுகளை நாம சாப்பிடுகிறோமா? இல்லாவிட்டால் ஏதோ வயிற்றை நிரப்ப வேண்டும் என்று எது கிடைக்கிறதோ அதை சாப்பிட்டு வயிற்றை நிரப்புகிறோமா?*

*அநேகருடைய வேலை அமர்ந்தே செய்யும் வேலையாயிருக்கும். வேலை முடிந்த பிறகு நாம் ஒரு அரை மணி நேமாவது நடக்கிறோமா? அது உடல் ஆரோக்கியத்திற்கு மிகவும் இன்றியமையாதது. தேவையான அளவு தூங்குகிறோமா? ஒரு நாளைக்கு ஆறு மணியிலிருந்து ஏழு மணி நேரம் தூங்க வேண்டும். ஆனால் வேலை வேலை என்று ஓய்வெடுக்காமல், தூக்கமில்லாமல், வேலை செய்து உடல்நலத்தைக் கெடுத்துக்கொள்வதால் என்ன பயன்? அநேகர், சரியான நேரத்தில் உணவருந்த மாட்டார்கள். வேலை வேலை என்று பிஸியாக இருந்துவிட்டு, நேரம் கெட்ட வேளையில் சாப்பிடுவார்கள். வயிற்றில் அல்சர் வந்தப பிறகு மருந்து எடுத்து என்ன பயன்? சிலர் காலை வேளை எதையும் சாப்பிட மாட்டார்கள். ஆனால் இரவு வேளை உணவை விடலாம். ஆனால் காலை வேளை உணவு மிகவும் முக்கியம். அது Breaking the fast அதனால் தான் அது Break fast.*

*சிலர், புகைபிடித்து, அல்லது வேறு காரியங்களுக்கு தங்கள் சரீரங்களில் இடம் கொடுத்து அதை அசுசிப்படுத்துகிறார்கள்.*

நமது சரீரம் தேவனுடைய ஆலயமாக இருப்பதால் அவற்றை நாம் கண்டிப்பாக நிறுத்தியே ஆக வேண்டும். நீங்கள் உங்களுடையவர்களல்லவென்று அறியீர்களா? கிரயத்துக்குக் கொள்ளப்பட்டீர்களே; இயேசுகிறிஸ்து நம் மாசில்லாத இரத்தத்தை சிந்தி உங்களை மீட்டுக் கொண்டாரே, தமது, குற்றமில்லாத இரத்தத்தை கிரயமாக செலுத்தி உங்களை மீட்டுக் கொண்டாரே, பின் எப்படி அதை கெட்ட காரியங்களுக்கு பயன்படுத்த முடியும்?

சாப்பிட வேண்டிய அளவு சாப்பிட்டு, தூங்க வேண்டிய அளவு தூங்கி, நடக்க வேண்டிய அளவு நடந்தால், நம் உடல் நலத்தை தக்க வைத்துக் கொள்ளலாம். அகஸ்டின் ஜெபக்குமார் அண்ணன் அவர்கள், ஒரு குறிப்பிட்ட அளவைத் தாண்டி கொஞ்சம் கூட அதிகமாக சாப்பிட மாட்டார்கள். என்னதான ருசியாக இருக்கட்டும், அந்த அளவு தான். அந்த மாதிரி குறிப்பிட்ட அளவு மாத்திரம் சாப்பிட்டு, தங்கள் உடல் நலத்தைக் காத்து அநேகருக்கு பிரயோஜனமாயிருக்கும்படி, கர்ததருடைய ஊழியத்தை செய்யும்படி தங்களை கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கிறர்கள். Father Berchmans அவர்களும் அப்படித்தான். அவர் சொல்வார், இன்னும் கர்த்தருக்கு என்று ஓடியாடி உழைக்க வேண்டாமா? இப்படி சாப்பிட்டு உடல் நலத்தைக் கெடுத்தால் பிறகு எப்படி கர்த்தருக்கு ஊழியம் செய்வது? என்று சொல்வார்கள்.

கர்த்தருக்கென்று பெரிய காரியங்களை சாதிக்க வேண்டுமா? உங்கள் மனநிலையும் சிந்தனைகளும் சரியாக வேலை செய்ய வேண்டாமா? உங்கள் உடல் நலத்தை பேணிக் கொள்ளுங்கள். நமது சரீரம் தேவனுடைய ஆலயமாயிருக்கிறபடியால், ஆவியானவர் வாசம் செய்யும் ஆலயமாயிருக்கிறபடியால், நாம்

*நம் சரீர பாண்டங்களை ஜாக்கிரதையாக பாதுகாத்துக் கொள்ள கடமைப்பட்டிருக்கிறோம். ஆகையால் தேவனுக்கு உடையவைகளாகிய நமது சரீரத்தினாலும் நமது ஆவியினாலும் தேவனை மகிமைப்படுத்தும்படியாக நமது சரீரங்களை சரியானபடி காத்து அவருக்கென்று சாட்சியாக இன்னும் அநேக ஆண்டுகள் வாழ்ந்து அவரை மகிமைப் படுத்துவோமாக. ஆமென் அல்லேலூயா!*

*தேவாதி தேவன்*
*தினந்தோறும் தங்கும்*
*தேவாலயம் நாமே*
*ஆவியான தேவன்*
*அச்சாரமானார் அதிசயம் அதிசயமே*

*குதூகலம் கொண்டாட்டமே -நம்*
*இயேசுவின் சந்திதானத்தில்*
*ஆனந்தம் ஆனந்தமே என்*
*அன்பரின் திருப்பாதத்தில்*

***ஜெபம்:*** *எங்களை நேசிக்கிற எங்கள் நல்ல தகப்பனே, எங்கள் சரீரத்திற்கும் ஆவிக்கும் உரிமையாளரே, அவற்றை நாங்கள் காக்க வேண்டிய விதத்தில் காத்துக் கொள்ள எங்களுக்கு கிருபைச் செய்யும். நீர் தங்கும் தேவாலயமாக எங்கள் சரீரம் இருப்பதால் அதை ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ள ஞானத்தைத் தாரும். நல்ல ஆரோக்கியத்தை கொடுத்து, உமக்கென்று வாழ கிருபைச் செய்யும். இயேசு கிறிஸ்துவின்*

*நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## 33. மீண்டும் நிலைநிறுத்தும் கிறிஸ்துவின் அன்பு

*“நான் அடைந்ததும் உங்களுக்குப் பிரதானமாக ஒப்புவித்ததும் என்னவென்றால், கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம்பண்ணப்பட்டு, வேதவாக்கியங்களின்படி மூன்றாம்நாளில் உயிர்த்தெழுந்து, கேபாவுக்கும், பின்பு பன்னிருவருக்கும் தரிசனமானார்” - 1 கொரிந்தியர் 15:3-5.*

*'அப்பொழுது, இயேசு அவர்களை நோக்கி: மேய்ப்பனை வெட்டுவேன், மந்தையின் ஆடுகள் சிதறடிக்கப்படும் என்று எழுதியிருக்கிறபடி, இந்த இராத்திரியிலே நீங்கள் எல்லாரும் என்னிமித்தம் இடறலடைவீர்கள். ஆகிலும் நான் உயிர்த்தெழுந்த பின்பு, உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போவேன் என்றார்' (மத்தேயு 26:31-32) என்று இயேசுகிறிஸ்து கூறினபோது, பேதுருவுக்கு அதைக் குறித்து மிகவும் துக்கமாயிருந்தது. அவர் என்னுடைய போதகருக்கு இந்த காரியங்கள் நடக்கக்கூடாதே என்று சிந்திக்க ஆரம்பித்தார். அவரோடு கடந்த மூன்றறை வருடங்களாக கூடவே இருந்து, அவர் போதித்த காரியங்களையும், அவர் செய்த அற்புதங்களையும் கண்டிருந்த பேதுருவுக்கு இந்த காரியங்கள் நடக்க எந்த சாத்தியமும் இல்லை என்று ஆணித்தரமான விசுவாசம் இருந்தது.*

*ஆனால் ஒரே இராத்திரியில் எல்லாம் மாறுதலாக முடிந்தது. வியாழனன்று இராப்போஜனத்தை ஆசரித்த சில மணி நேரங்களில் யூதாஸ்காரியோத் கிறிஸ்துவை காட்டிக் கொடுத்து, அவர் கைது செய்யப்பட்டு, ஏரோதின் அரண்மனைக்கும்,*

*பிலாத்துவின் நியாயாசனத்திற்கும் முன்பு நிறுத்தப்பட்டு, அடுத்தநாள் வெள்ளிக்கிழமை காலை ஒன்பது மணிப் போல அவர் சிலுவையில் அறையப்பட்டு, மரித்தும் போனாரே என்று ஆதங்கத்தோடு பேதுரு நடந்த நிகழ்ச்சிகளை சிந்தித்தபடி நடந்து சென்று கொண்டிருந்தார்.*

*இயேசுகிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டபோது, அவரோடு எந்த சீஷனும் இருக்கவில்லை யோவானைத்தவிர. பேதுருவும் கூட்டத்தோடு கூட்டமாக போய் விட்டிருந்தார். இயேசுகிறிஸ்துவின் சரீரம் அடக்கம் செய்யப்பட்டபோது, ஒரு சீஷரும் இருக்கவில்லை. 'சாயங்காலமானபோது, இயேசுவுக்குச் சீஷனும் ஐசுவரியவானுமாயிருந்த யோசேப்பு என்னும் பேர்கொண்ட அரிமத்தியா ஊரானாகிய ஒரு மனுஷன் வந்து, பிலாத்துவினிடத்தில் போய், இயேசுவின் சரீரத்தைக் கேட்டான். அப்பொழுது, சரீரத்தைக் கொடுக்கும்படி பிலாத்து கட்டளையிட்டான். யோசேப்பு அந்தச் சரீரத்தை எடுத்து, துய்யதான மெல்லிய துப்பட்டியிலே சுற்றி, தான் கன்மலையில் வெட்டியிருந்த தன்னுடைய புதிய கல்லறையிலே அதை வைத்து, கல்லறையின் வாசலில் ஒரு பெரிய கல்லைப் புரட்டிவைத்துப் போனான். அங்கே மகதலேனா மரியாளும் மற்ற மரியாளும் கல்லறைக்கு எதிராக உட்கார்ந்திருந்தார்கள்' (மத்தேயு 27:57-61). ஒரு சீஷனும் அவரை அடக்கம் செய்யும்வரைக் காத்திருக்கவில்லை.*

*பேதுரு நடந்த காரியங்களை நினைத்தபடி ஆதங்கத்தோடு நடந்து கொண்டிருந்தார். கர்த்தரை மறுதலித்து விட்டோமே என்று மனதில் குற்ற உணர்ச்சியோடும், மனம் நிறைந்த துக்கத்தோடும், சனிக்கிழமை இரவு நெடுநேரம் தூக்கம் வராமல், திரும்பி திரும்பி படுத்து, கடைசியாக கண் அயர்ந்தபோது,*

விடிய ஆரம்பித்திருந்தது. அப்போது திடீரென்று கதவுத்தட்டப்படும் சத்தம் கேட்டது. அதை கேட்டவுடன் பேதுருவின் இருதயம் பலமாக துடிக்க ஆரம்பித்தது. ஐயோ அரசாங்க வீரர்கள் தன்னை கைது செய்துப்போகத்தான் வந்திருக்கிறார்கள் என்று பயப்பட ஆரம்பித்தார்.

அதற்குள் மகதலேனா மரியாளின் சத்தம் கேட்டது. 'நான்தான் கதவை திறவுங்கள்' என்ற சத்தம் கேட்டு, எழுந்து கதவை திறந்து, 'என்ன இந்த காலையிலே' என்று கேட்டார். அதற்குள் மரியாள், மேல் மூச்சு வாங்க, 'இயேசுகிறிஸ்து உயிர்த்தெழுந்து விட்டார்' என்று கூறினபோது, பேதுருவின் தூக்கம் எங்கோ ஓடிப்போனது. பக்கத்தில் படுத்திருந்த யோவானை கையைப்பிடித்து இழுத்துக்கொண்டு கல்லறை இருந்த இடத்திற்கு வேகமாக ஓடினார்.

கிறிஸ்து வைக்கப்பட்டிருந்த கல்லறையை மூடியிருந்த கல் புரட்டபட்டு இருந்தது. உள்ளே எட்டிப்பார்த்தார். அங்கு இயேசுகிறிஸ்துவை சுற்றி வைக்கப்பபட்டிருந்த சீலைகள் அழகாக மடித்து வைக்கப்பட்டிருந்தது. 'பேதுருவோ எழுந்திருந்து, கல்லறையினிடத்திற்கு ஓடி, அதற்குள்ளே குனிந்துபார்க்கையில், சீலைகளைத் தனிப்பட வைத்திருக்கக்கண்டு, சம்பவித்ததைக் குறித்துத் தன்னில் ஆச்சரியப்பட்டுக்கொண்டுபோனான்' (லூக்கா 24:12) ஆம், மீண்டும் பேதுரு என்ன நடந்தது என்று ஒன்றும் விளங்காமல், இயேசுகிறிஸ்து நிஜமாகவே உயிர்த்தெழுந்து விட்டாரா என்று சந்தேகமும், வியப்பும், கலக்கமும் உடையவராக நடந்து சென்று கொண்டிருந்தபோது, திடீரென்று இயேசுகிறிஸ்து அவருக்கு முன் தோன்றினார். 'கேபாவுக்கும், பின்பு பன்னிருவருக்கும்

தரிசனமானார்' (1கொரிந்தியர் 15:5).

இயேசுகிறிஸ்து அவர் முன் தோன்றிய உடனேயே பேதுருவுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. கர்த்தரை மறுதலித்த தனக்கு, தகுதியில்லாத தனக்கு முன், தான் நேசித்த ஆண்டவர், தான் மரித்ததாக எண்ணியிருந்த கர்த்தர் தனக்கு முன் நிற்பதை கண்ட பேதுரு அவருடைய காலில் விழுந்து, சந்தோஷ மிகுதியால் கண்ணீர் விட்டார்.

உயிர்த்தெழுந்த கிறிஸ்துவை கண்ட பேதுரு இயேசுகிறிஸ்து கர்த்தரை கண்டோம் என்று அப்படியே இருந்து விடவில்லை. மீண்டும், 'மீன்பிடிக்கப் போகிறேன்' என்று தன்னோடு சீஷர்களையும் அழைத்துக்கொண்டு சென்றபோது, இயேசுகிறிஸ்து தாம் அழைத்த அழைப்பை உறுதிப்படுத்தும்படி அவரை அழைத்து மீண்டும் தம் ஊழியத்தில் நிலைநிறுத்தினார். அதன்பின் பேதுரு திரும்பி போகவில்லை. கர்த்தருக்கு உண்மையாக இறுதிவரை வாழ்ந்து, தன்னை கிறிஸ்துவைப்போல சிலுவையில் அறையும்படி கொண்டுப்போகப்படும்போது, தான் கிறிஸ்துவைப்போல தன் தலை நேராக வைத்து அடிக்கப்பட பாத்திரவான் அல்ல என்று சொல்லி, தலைகீழாக தன்னை சிலுவையில் வைத்து அறையும்படி சொல்லி, அப்படியே அறையப்பட்டு, இரத்தசாட்சியாய் மரித்தார்.

பிரியமானவர்களே, இது ஒரு கதைப்போல இருந்தாலும், இயேசுகிறிஸ்து உயிரோடு எழுந்தப்பின் பேதுருவிற்கு தனிப்பட்ட முறையில் தரிசனமானார் என்று 2 கொரிந்தியர் 15:5லும், லூக்கா 24:34லிலும் பார்க்கிறோம். கர்த்தரை மறுதலித்த பேதுருவையும் அன்புக்கூர்ந்து தம்முடைய ஊழியத்தில் நிலைநிறுத்தின கிறிஸ்து, ஒருவேளை அவரை

விட்டுப்பிரிந்து தூரப்போயிருக்கிற நம்மையும் கூட திரும்ப அவருக்குள் நிலைநிறுத்த வல்லவராகவே இருக்கிறார்.

ஒருவேளை நான் அதற்கு தகுதியல்ல என்று நினைக்கிறோமா? பேதுருவை அழைத்த தேவன் இன்றும் மாறாதவராகவே இருக்கிறார். மீண்டும் அவருடைய அழைப்பிற்கு செவி சாய்த்து அவருடைய அன்பிற்குள் வந்து விடுவோம். கர்த்தர் ஒருபோதும் நம்மை தள்ளிவிட மாட்டார். அவருடைய ஊழியத்தில் நம்மை நிலைநிற்க வைத்து நிச்சயமாகவே அநேகருக்கு நம்மை ஆசீர்வாதமாக வைப்பார். ஆமென் அல்லேலூயா!

**ஜெபம்:** எங்கள்அன்பின் பரலோக தகப்பனே, கிறிஸ்துவை விட்டு பின் வாங்கி சென்ற பேதுருவிற்கு தரிசனம் கொடுத்து, மீண்டும் அவரை ஊழியத்தில் நிலைநிறுத்தின கிறிஸ்துவின் அன்பிற்காக நன்றி செலுத்துகிறோம். அதுப்போல கிறிஸ்துவின் மேல் வைத்திருந்த ஆதி அன்பை இழந்தவர்களாக அவருடைய ஊழியத்தில் நிலை நிற்காமல் பின்மாற்றத்தில் இருக்கும் ஒவ்வொருவரையும் தேவன் தாமே தொடுவீராக. மீண்டும் உம்முடைய அன்பிற்குள் அவர்கள் வந்துவிட அவர்களுடைய இருதயத்தில் கிரியை செய்வீராக. உமக்கென்று உண்மையாய் இறுதிநாள் வரை ஊழியம் செய்ய கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

# *34. ஜன்னல்களில் நட்சத்திரம்*

*தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார் - யோவான் 3:16.*

*இரண்டாம் உலகப் போரின் போது அமெரிக்காவில் ஒரு வழக்கம் இருந்தது. யாருடைய வீடுகளிலிருந்து அவர்களுடைய மகன் போருக்கு சென்றிருக்கிறானோ அவர்களுடைய வீடுகளில் ஒரு நட்சத்திரத்தை தொங்கி விடுவது என்பது வழக்கமாக இருந்தது. அப்படி தொங்க விடும்போது தங்க நிறத்தில் நட்சத்திரம் இருந்தால் போரில் தன் நாட்டிற்காக அவர்கள் மகன் மரித்துப் போய் விட்டான் என்று அர்த்தமாகும்.*

*ஒரு நாள் அங்கு ஒரு மனிதர் தன் ஐந்து வயது மகனை தெருவில் கூட்டிக் கொண்டு சென்றார். அந்த மகன் ஆவலோடும் ஆச்சரியத்தோடும் அந்த நட்சத்திரங்களை பார்த்தபடி சென்றுக் கொண்டிருந்தான். அவனுக்கு ஏன் அவர்கள் நட்சத்திரங்களை தொங்க விட்டிருக்கிறார்கள் என்பதை அறியும் ஆவல் எழுந்தது. தன் தந்தையிடம் அதைக் குறித்து கேட்டான்.*

*அவனது தந்தை அந்த குடும்பங்களில் இருந்து அவர்களுடைய மகன்கள் போருக்கு சென்றிருப்பதாக சொன்னார். அவன் அப்படி நடந்து செல்லும்போது ஒவ்வொரு வீடுகளண்டை நட்சத்திரம் தொங்க விட்டிருப்பதை கண்டு தன் கைகளை தட்டி, 'அப்பா பாருங்கள், இந்த குடும்பமும் தங்கள்*

*மகனை போருக்கு அனுப்பியிருக்கிறார்கள்' என்று சொல்லுவான்.*

*கடைசியாக அவர்கள் வீடுகள் இல்லாத வெறும் மைதானத்திற்கு வந்தபோது, வானத்திலிருந்து ஒரு நட்சத்திரம் அதிகமாக பிரகாசத்துடன் ஒளிர்ந்து கொண்டிருந்தது. அதைக் கண்ட அந்த மகன் மிகவும் ஆச்சரியத்துடன், 'அப்பா அதோ அங்கே பாருங்கள்! வானத்தின் ஜன்னலிலிருந்து ஒரு நட்சத்திரம் பிரகாசிக்கிறது! தேவன் தன் மகனையும் அனுப்பியிருக்கிறார் பாருங்கள்' என்றான்.*

*ஆம், நிச்சயமாகவே தம் ஒரே பேறான குமாரனை அவர் இவ்வுலகத்திற்கு தந்து, இந்த உலகத்தில் தாம் அன்பு செலுத்துவதை நிரூபித்தார். அந்த குமாரன் சிலுவையில் பல பாடுகள் பட்டு மரிக்கப் போவதை அறிந்திருந்தும் தம் மகனை அளித்த அந்த தந்தையின் அன்பு எத்தனை பெரியது!*

*அமெரிக்காவில் ஒவ்வொரு குடும்பத்திலும் இருந்து சென்ற மகன்கள் தங்கள் தேசத்திற்காக பல பாடுகள் பட்டு, போராடி வெற்றியை வாங்கி தந்தார்கள். அவர்களின் தியாகம் எத்தனை பெரியது! ஆனால் தேவனின் மைந்தனோ இந்த முழு உலகத்தின் இரட்சிப்பிற்காக பாடுகள் பட்டு, போராடி தமது இரத்தத்தை சிந்தி, அதை விலைகிரயமாக கொடுத்து நமக்கு இரட்சிப்பை இலவசமாக பெற்றுத் தந்தாரே! அவரது தியாகம் எத்தனை பெரியது!*

*இயேசுகிறிஸ்துவின் இரத்தம் முழு உலகத்திற்காகவும் சிந்தப்பட்டது. ஒரு சாராருக்கு மாத்திரமல்ல, கிறிஸ்தவர்களுக்கு மட்டுமல்ல, உலகத்தில் வந்த எந்த மனிதனுக்காகவும்*

*சிந்தப்பட்டது. அதினால் இரட்சிப்பு இந்த உலகத்திற்கு வந்தது. இதை உலக மக்கள் அவர் உலகத்திற்கு வந்த நோக்கத்தை அறியாதவர்களாக, தங்கள் பாவங்களில் மரித்துக் கொண்டிருக்கிறார்கள். இயேசுகிறிஸ்து தேவனுடைய மைந்தனாக இருந்தும், இந்த உலகத்தில் வந்து, நமக்காக சிலுவையில் மரித்து, மூன்றாம் நாள் உயிரோடு எழுந்தார் என்பதே நற்செய்தி. இதை விசுவாசிப்பவர்கள் யாவரும் தேவனுடைய பிள்ளைகள் என்றழைக்கப்படுவார்கள்.*

*அநேகருக்கு தேவனுடைய பிள்ளைகள் என்றழைக்கப்படுவதை பார்க்கிலும் உலகத்தின் பிள்ளைகள் என்றழைக்கப்படுவதையே விரும்புவதால் அவரை ஏற்றுக் கொள்ள மறுக்கிறார்கள். சத்துருவானவன் அவர்களுடைய கண்களை குருடாக்கி இருக்கிறான். அவர்கள் கண்கள் திறக்கப்பட தக்கதாக ஜெபிப்போம். இயேசுகிறிஸ்து மட்டுமே உலக இரட்சகர் என்பதை உலகத்திற்கு அறிவிப்போம். அவருடைய குற்றமில்லாத இரத்தத்தால் மாத்திரமே பாவ மன்னிப்பு உண்டென்பதை வெளிப்படுத்துவோம். அநேகர் இரட்சிப்படைய வழி நடத்துவோம். ஆமென் அல்லேலூயா!*

*இரத்தம் சிந்துதல் இல்லாமல் மன்னிப்பில்லை*
*இயேசு நாமம் சொல்லாமல் மீட்பு இல்லை*
*கூப்பிடு இயேசு இயேசு என்று - உன்*
*குறைகளெல்லாம் நிறைவாக்கி நடத்திடுவார்*

*துன்பமா துயரமா அது*
*தண்ணீர்பட்ட உடை போன்றதம்மா*
*காற்றடித்தா வெயில் வந்தா*

*காய்ந்து போகும் கலங்காதே*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, இந்த லெந்து நாட்களில் கிறிஸ்துவின் பாடுகள், மரணத்தை தியானிக்கிற நாங்கள் அவர் எதற்காக இந்த பாடுகளை பட்டார், சிலுவையில் கோர மரணத்தை அடைந்தார் என்பதை உணர்ந்தவர்களாக கிறிஸ்துவின் இரத்தம் உலக மக்கள் அனைவருக்காகவும் சிந்தப்பட்டது என்பதை மற்றவர்களுக்கு வெளிப்படுத்த சாட்சியாக அறிவிக்க ஒவ்வொருவருக்கும் உணர்த்தும். இரட்சிக்கப்படாத ஒவ்வொருவரும் இரட்சிக்கப்பட கிருபை செய்தருளும். சாத்தான் குருடாக்கியிருக்கிற கண்களை இயேசுவின் சுவிசேஷத்தின் ஒளியால் திறக்கப்பட கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

# 35. சிலுவையிலறையப்பட்டேன்

*கிறிஸ்துவுடனேக் கூட சிலுவையிலறையப்பட்டேன், ஆயினும் பிழைத்திருக்கிறேன் - கலாத்தியர் 2:20.*

பிலிப்பைன்ஸ் நாட்டின் வடக்கு பகுதியில் சான் பெட்ரோ என்னும் கிராமம் உள்ளது. இங்கு ஒவ்வொரு ஆண்டும் பெரிய வெள்ளிக்கிழமையன்று சில பக்தர்கள் மதசடங்கு ஒன்றை நிறைவேற்றுகின்றனர். 2013ஆம் ஆண்டு நடைபெற்ற இந்த சடங்கில், பதினாறுப் பேர் உண்மையிலேயே சிலுவையில் அறையப்பட்டிருந்தனர். முன்னதாக ரோம வீரர்கள் போன்று உடையணிந்தவர்கள் கிராமத்தின் தெருக்களில் இந்த பதினாறு பேரையும் மத்தியான வேளையில் வெயிலில் சாட்டைகளை வைத்து அடித்துக் கொண்டே சிலுவையில் அறையப்படும் இடத்திற்கு அழைத்து சென்றனர். அவர்கள் முதுகில் இரத்தம் வடிந்து கொண்டேயிருந்தது. அவர்கள் அறையப்பட வேண்டிய சிலுவையை மற்றவர்கள் சுமந்து சென்றனர்.

இதை பார்வையிட உலக முழுவதிலிருந்தும் ஆயிரக்கணக்கான உல்லாச பயணிகள் திரண்டிருந்தனர். இப்படிப்பட்ட கொடூரமான சடங்கை நிறைவேற்றுவதன் மூலம் பாவம் மன்னிக்கப்படுவதாக அவர்கள் நினைக்கிறார்கள். சிலர் ஆண்டவருக்கு நன்றி சொல்வதற்காகவும், வியாதியிலிருந்து சுகமடையவும் இப்படிச் செய்வதாகவும் சொன்னார்கள். அலெக்ஸ் லாரானங் என்ற வியாபாரி நல்ல அதிர்ஷ்டம் கிடைப்பதற்காகவும், நல்ல உடல் நலம் பெறவும் சிலுவையில் அறையப்படுவதாகவும் கூறினார். ரூபன் எனாஜி என்பவர் 27ஆவது வருடமாக சிலுவையில் அறையப்படுவதாக கூறினார். இவர்கள் சிலுவையில் அறையப்பட்டவுடன் சில நிமிடங்கள்

சிலுவையில் தொங்கினார்கள். பின் ஆணிகளை உருவிவிட்டு, இவர்களையும் கீழே இறக்கி, முதலுதவி மையத்திற்கு எடுத்துச் சென்று சிகிச்சை அளித்து, வீட்டிற்கு அனுப்பி வைத்தனர். 1950ஆம் ஆண்டு இக்கிராமத்தில் தொடங்கப்பட்ட இந்த சடங்கை இது இயேசுகிறிஸ்துவின் விருப்பம் அல்ல என்று மதத்தலைவர்கள் சொன்னபிறகும் தொடர்ந்து வருடா வருடம் நடைபெறுகிறது.

இயேசுகிறிஸ்து சிலுவையிறையப்பட்ட தினத்தில் அநேகர் புலம்பி அழுதுகொண்டே அவர் பின்சென்றனர். அவர்களை பார்த்து 'எனக்காக அழாமல் உங்களுக்காகவும் உங்கள் பிள்ளைகளுக்காகவும் அழுங்கள்' என்று இயேசுகிறிஸ்து கூறினார். அவருக்காகவோ, நமக்காகவோ அல்லது நம் பாவம் மன்னிக்கப்படவோ நாம் இயேசுகிறிஸ்துப் போன்று சிலுவையில் அறையப்பட வேண்டுமென்று வேதாகமத்தில் எங்கும் எழுதப்படவில்லை. அதற்குபதில் கிறிஸ்துவை உடையவர்கள் மாமசத்தையும் அதன் ஆசை இச்சைகளையும் சிலுவையில் அறையும்படி அறிவுறுத்தப்படுகிறோம். மாம்சத்தின் கிரியைகளையும் உலக இச்சைகளையும் விட்டுவிட வேண்டுமென்பதே அதன் அர்த்தம். அதைவிட்டுவிட்டு உண்மையாகவே சிலுவையில் அறைந்துக் கொள்வது என்பது எத்தனை மதியீனமாக செயல்! அப்படியானால் புறமதத்தவர் தங்கள் உடல்களை கீறிக் கொள்வதற்கும், இரத்தம் வரும்வரை அடித்துக் கொள்வதற்கும் என்ன வித்தியாசம் இருக்க முடியும்?

இவையெல்லாம் கிறிஸ்து நம்மிடம் எதிர்ப்பார்ப்பது இல்லை. மாறாக நம் இருதயத்தை அவருக்கென்று அர்ப்பணித்து, உலகத்தையும் அதன் ஆசை இச்சைகளையும் வெறுத்துவிடுவதே அவருக்கு உகந்ததாகும். அப்போது நாமும்

*பவுலைப் போல கிறிஸ்துவுடனேக்கூட சிலுவையிலறையப்பட்டேன், ஆயினும் பிழைத்திருக்கிறேன் என்று கூறமுடியும்.*

*சாம்பலை பூசிக்கொள்ளுதல், சிலுவையில் அறைந்து கொள்ளுதல் போன்ற வேளிப்படையான அடையாளங்களால் நம் பக்தியை வெளிப்படுத்தாமல் உள்ளான அர்த்தத்தை உணர்ந்தவர்களாக சுயத்தை வெறுத்தவர்களாக, நம் சிலுவையை சுமந்து கொண்டு இயேசுவை பின்பற்றுவோம். அவருடைய நுகம் மெதுவானதாகவும், அவருடைய சுமை இலகுவாகவும் இருக்கிறது. ஆமென் அல்லேலூயா!*

*சிலுவை சுமப்பதனால்*
*சிந்தையே மாறிவிடும்*
*நீடிய பொறுமை வரும்*
*நிரந்தர அமைதிவரும்*

*உன்னையே வெறுத்துவிட்டால்*
*ஊழியம் செய்திடலாம்*
*சுயத்தை சாகடித்தால்*
*சுகமாய் வாழ்ந்திடலாம்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, எங்களுக்காக கோர குருசை சுமந்து எங்கள் பாவங்களுக்காக சிலுவையில் அறையப்பட்டு கடைசி சொட்டு இரத்தம் வரை எங்களுக்காக இயேசுகிறிஸ்து சிந்திய இரத்தத்திற்காக நன்றி செலுத்துகிறோம். இயேசு சுமந்ததை நாங்கள் சுமக்க தேவையில்லையே, அதை அறியும்படி அப்படி செய்பவர்களின் கண்களை திறந்தருளும். தங்கள் இருதயத்தை கர்த்தருக்கு அர்ப்பணித்தவர்களாக,*

*சுயத்தை வெறுத்து, தங்கள் சிலுவையை சுமந்த வர கற்றுத்தாரும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

# 36. சிலுவையின் நிழல்

*இப்பொழுது என் ஆத்துமா கலங்குகிறது, நான் என்ன சொல்லுவேன். பிதாவே, இந்த வேளையினின்று என்னை இரட்சியும் என்று சொல்வேனோ; ஆகிலும், இதற்காகவே இந்த வேளைக்குள் வந்தேன் - யோவான் 12:27.*

ஹோல்மன் ஹன்ட் என்பவர் இயேசுகிறிஸ்துவின் மரணத்தை தெரிவிக்கும் வகையில் ஒரு ஓவியத்தை வரைந்தார். அதில் இயேசு நாசரேத்தில் தன் தகப்பனாரின் தச்சு கூடத்தில் தன் மேஜைக்கு பக்கத்தில் நிற்கிறார். அவர் தன் இரம்பத்தை தரையில் வைத்து விட்டு தன் கண்களை வானத்திற்கு நேராக நோக்குகிறார். வலிக்கும் தன் கைகளை தன் தசைகளை தளர்வாக்க இரண்டு கைகளையும் நீட்டுகிறார். சாயங்கால சூரியன் கதவின் வழியாக அந்த கூடத்திற்கு வருகிறது. அவர் அங்கு நின்று அப்படி கைளை தளர்த்தும்போது, அவருடைய நிழல் அவருக்கு பின்னாக ஒரு சிலுவையைப் போல காட்சியளிக்கிறது. அவர் அப்போதே சிலுவையிலறையப்பட்டவரைப் போல அந்த காட்சி தெரிகிறது.

அவருடைய தாயார் மரியாள் தரையில் முழங்கால்படியிட்டு, அதைப் பார்க்கிறார்கள். அவர்களுடைய கரங்களில் கிழக்கேயிருந்த வந்த ஞானிகள் கொடுத்த பரிசுகள் இருக்கிறது. அவர்கள் அந்த நிழலைப் பார்த்து அதிர்ச்சி அடைவதைப் போல அந்த ஓவியம் வரையப்பட்டிருந்தது.

அந்த ஓவியம் இயேசுகிறிஸ்து எதற்காக இந்த உலகத்திற்கு வந்தார் என்பதை ஞாபகப்படுத்துகிறது. உலகத்தின் பாவத்தை சுமந்த தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டியாக வந்ததை

ஞாபகப்படுத்துகிறது. அதை அவர் சிலுவையில் சுமந்து தீர்ப்பதன் மூலமாகவே நிறைவேற்ற முடிந்தது.

இப்பொழுது என் ஆத்துமா கலங்குகிறது, நான் என்ன சொல்லுவேன். பிதாவே, இந்த வேளையினின்று என்னை இரட்சியும் என்று சொல்வேனோ; ஆகிலும், இதற்காகவே இந்த வேளைக்குள் வந்தேன் என்று இயேசுகிறிஸ்து கூறினார். அவருடைய உள்ளம் அவர் அடையப் போகிற ஆக்கினையை குறித்து மிகவும் கலங்கியது. பிதாவே இந்த வேளையிலிருந்து இரட்சித்தருளும் என்று ஜெபித்தால் பிதா ஒருவேளை இரங்கி, அவரை அந்த வேளையினின்று இரட்சித்திருப்பார். ஆனால் உலக தோற்றமுதல் அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டி என்று அழைக்கப்பட்ட கிறிஸ்து இதற்காகவே இந்த வேளைக்குள் வந்தேன் என்று தம்மை முற்றிலும் அர்ப்பணித்தார்.

அவர் சிலுவையில் தமது இரத்தத்தை சிந்தினபடியால் நம் பாவங்கள் நீங்கி நாம் இரட்சிக்கப்பட்டோம். அவர் பாடுகளை சகித்தபடியினால் நம் வியாதிகள் நீங்கி, அவருடைய தழும்புகளால் சுகமானோம். அவர் சிலுவையை சுமந்தபடியால் நாம் நம் இரட்சிப்பில் களிகூர்ந்து அவரில் மகிழ முடியும். அவர் சுமந்த சிலுவைக்காக அவரை நன்றியோடு ஸ்தோத்தரிப்போம். ஆமென் அல்லேலூயா!

சிலுவையின் நிழலில் அனுதினம் அடியான்
சாய்ந்திளைப்பாறிடுவேன்
சிலுவையின் அன்பின் மறைவில்
கிருபையின் இனிய நிழலில்
ஆத்தும நேசரின் அருகில்
அடைகிறேன் ஆறுதல் மனதில்

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே இயேசுகிறிஸ்து சிலுவையில் தம் கடைசி சொட்டு இரத்தத்தையும் சிந்தி மரிப்பதற்காகவே இந்த உலகத்திற்கு வந்தாரே அவரின் தியாகத்தை நினைத்து நன்றி செலுத்துகிறோம். அவருடைய சிலுவை மரணத்தினால் எங்களுக்கு இரட்சிப்பு கிடைத்ததற்காக உமக்கு நன்றி செலுத்துகிறோம். எங்களை நீதிமான்களாக்கிய கிறிஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தத்திற்காக நன்றி செலுத்துகிறோம். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் எங்கள் துதி ஸ்தோத்திரங்களை உமக்கே ஏறெடுக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

# 37. ஜீவாதாரபலியாகிய இயேசு கிறிஸ்து

*தேவன் நமக்கு அடைக்கலமும் பெலனும், ஆபத்துக்காலத்தில் அநுகூலமான துணையுமானவர் - சங்கீதம் 46:1.*

ஐரோப்பாவின் வடக்கில் உள்ள நாடுகளில் காடுகள் ஏராளம். அங்குள்ள ஒரு காட்டிற்கு சென்று, இன்பமாக நாளை கழிக்கலாமென்று ஒரு நண்பர் கூட்டம் எண்ணியது. அவர்கள் சுமார் பதினைந்து பேர் இருப்பார்கள். இரண்டு மூன்று வீட்டினர் ஒன்றாக வந்திருந்தனர். சமைத்த பண்டங்களை சாப்பிட்டபின் பேசி கொண்டிருக்கையில் தொலைவில் கண்ட ஒரு காட்சி அவர்களை அப்படியே தூக்கி வாரிப்போட்டது. என்னது புகை? நெருப்பு? அக்காட்டில் ஒரு பகுதியில் மூங்கில் போன்ற மரங்கள் ஒன்றோடொன்று மோதி உராய்ந்ததன் விளவாக தீப்பொறி பறந்தது. அது பெருந்தீயாக காட்டையே பற்றி கொண்டது. அதை கண்ணுற்ற அவர்கள் தங்களுக்கு இறுதிகட்டம் வந்தது என்று அறிந்து வேதனைப்பட்டனர்.

இந்த நிலையில் இத்தீயை சமாளிக்க சிறுவன் ஒருவன் முன் வந்தான். கையிலிருந்த தீப்பெட்டியினுள் ஒரு தீக்குச்சியை எடுத்து உரசி பின்பு சருகுகள் நிறைந்த இடத்தில் அதை போட்டான். காட்டுத்தீ பரவி தங்களை நோக்கி வருவதற்குள் இந்த பையன் வேறு பக்கத்திலேயே நெருப்பு வைத்து விட்டானே என்று எல்லாரும் அவனை அடித்து விட்டார்கள். அதற்குள் அவன் வைத்த நெருப்பு தன் வேலையை முடித்து விட்டது. சுமார் ஐம்பது அடி சுற்றளவிலுள்ள புல் பூண்டுகளெல்லாம் வெந்து சாம்பலாயின. அங்குள்ளளவர் மத்தியில் நின்று என்ன செய்வதென்று அறியாமல் திகைத்தனர்.

அப்போது, காட்டுத்தீ அவர்களை சுற்றிலும் பரவி நன்றாக எரிந்தது. ஆனால் என்ன அதிசயம், அவர்களிடம் வரவேயில்லை. ஏனென்றால் அவர்கள் நின்றிருந்த இடம், வெந்து சாம்பலான இடம், காட்டு தீக்கு அங்கு இரை ஒன்றுமில்லை. பையன் வைத்த நெருப்பு ஏற்கனவே தன் வேலையை முடித்ததால் அந்த இடம் பாதுகாப்பானதாக மாறவே அனைவரும் பேராபத்தினின்று காப்பாற்றப்பட்டனர்.

ஆம் இதை போன்று தான் பாவ விளைவுகளால் நமக்கு எதிராக புறப்பட்ட நரக தீயினின்றும் நாம் பாதுகாக்கப்படுகின்றோம். அது எப்படி? பாவஞ்செய்கிற ஆத்துமாவே சாகும் (எசேக்கியேல் 18:4). பாவத்தின் சமப்ளம் மரணம் (ரோமர் 6:23) இறுதியில் நியாயந்தீர்க்கப்பட்டு, முடிவில்லா வேதனையுள்ள என்றென்றும் தீ எரிந்து கொண்டிருக்கும் நரகத்தில் தள்ளப்பட வேண்டும். இதுவே மனிதனுக்கு ஏற்பட்ட தீர்ப்பாயிருந்தது.

ஆனால் தேவனோ, நம்மில் மிகவும் இரக்கம் உள்ளவராய், காணப்படுகிறார். நம்மை பாவ சாபத்தினின்றும், கொடிய நரகாக்கினையில் இருந்தும் விடுவிக்கும்படியாக இயேசு என்னும் நாமத்தில் இவ்வுலகில் வந்து பிறந்தார். முறையாக நாம் பெற வேண்டிய தண்டனையை இயேசு தாமே தன் சரீரத்தில் ஏற்று கொண்டார். முழு உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்க்கும் தேவ ஆட்டுக்குட்டியாக நமக்காக பலியானார்(யோவான் 1:29). இதை ஒரு மனிதன் ஏற்று இயேசுவண்டை வரும்போது, தீமையினின்று காக்கப்படுவது மட்டுமல்ல, கூடவே இளைப்பாறுதலையும் இயேசு தருகிறார். இந்த இளைப்பாறுதலை பெற்று கொள்ள இன்றே இயேசுவை அண்டி கொள்ளுங்கள்.

தேவன் கொடுக்கும் இந்த அருமையான இலவசமான இளைப்பாறுதலை ஏற்று கொள்ளாதபடி, நமக்காக தமது சரீரத்தில் கிறிஸ்து வாரினால் அடிக்கப்பட்டார். பாடுகளை சகித்தார் என்பதை விசுவாசியாத ஒரு கூட்ட ஜனம், தங்களை தாங்களே, சங்கிலிகளால் அடித்து கொண்டு, இரத்தம் வரும்வரை தங்களை துன்புறுத்தி கொண்டு, தங்கள் முதுகுகளில் கம்பிகளை மாட்டி கொண்டு, இரதங்களை இழுத்து, பாடுகளை சுமந்து அப்படியாவது தங்கள் ஆத்துமாக்களுக்கு இளைப்பாறுதல் கிடைக்காதா என்று ஏங்கி கொண்டு இருக்கிறார்கள். அப்படி எல்லாம் உடலை வருத்தி இரட்சிப்பை பெற்று கொள்ளவே முடியாது. ஏற்கனவே அவற்றை சுமந்து தீர்த்த தேவன் ஒருவர் உண்டு. அவருடைய பாவமில்லாத இரத்தத்தால் நம்முடைய பாவங்கள் கழுவப்படுகிறது. இரட்சிப்பு நமக்கு அருளப்படுகிறது.

கிறிஸ்தவரல்லாத ஒருவர் சமீபத்தில் என்னிடம், நீ நரகத்திற்கா, பரலோகத்திற்கா எங்கு செல்லப்போகிறாய்' என்று கேட்டார். நான் உறுதியாக, 'நிச்சயமாக நான் பரலோகத்திற்கு தான் செல்வேன்' என்று கூறினேன். அதற்கு அவர்' என்ன உன் கடவுள் உன்னிடம் அப்படி சொன்னாரா' என்று கேட்டார். நான் அதற்கு, 'நான் இரட்சிக்கப்பட்டேன், அதனால் நான் நரகத்திற்கு செல்லமாட்டேன்' என்றேன். 'எனக்கு புரியவில்லை, இரட்சிப்பு என்றால் என்ன' என்று கேட்டார், நான் அவரிடம், 'இரட்சிப்பு என்றால், இயேசு எனக்காக இரத்தம் சிந்தினார், நான் அவருடைய இரத்தத்தினால் கழுவப்பட்டபடியால் இரட்சிக்கப்பட்டேன், ஆகையால் நான் நிச்சயமாக நரகத்திற்கு செல்ல மாட்டேன், பரலோகத்திற்கு தான் செல்வேன்' என்று உறுதியுடன் கூறினேன். அவரால் அதை ஏற்று கொள்ள

முடியவில்லை, கடந்து போய் விட்டார். கூட வேலை செய்யும் மற்றவர்கள், 'நீ எப்படி அப்படி உறுதியாய் சொல்ல முடியும், நீ பரலோகத்திற்கு செல்வாய் என்று, எங்களால் அப்படி நிச்சயமாக கூற முடியாது' என்று சொன்னார்கள். அவர்களும் கிறிஸ்தவர்களே! நான் கூறினேன், 'நம்முடைய கிரியைகளோ, நம்முடைய எந்த செயல்களும் நம்மை பரலோகம் கொண்டு சேர்க்காது, இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தால் கழுவப்பட்டால் மாத்திரமே பரலோகம் செல்ல முடியும்' என்று அழுத்தமாக கூறினேன். கிறிஸ்தவர்களாயிருந்தாலும், இன்னும் இரட்சிப்பை குறித்து அறியாத அந்த கூட்டத்தினருக்காக ஜெபிக்க வேண்டும் என்று நினைத்தவாறே என் வேலையை தொடர்ந்தேன்.

கிறிஸ்தவர்களாயிருந்தும், கிறிஸ்துவின் இரட்சிப்பை அறியாத கூட்டம் உண்டு. கிறிஸ்தவர்களல்லாதவர்களாக இருந்து, அவருடைய இரட்சிப்பை அறியாத மக்கள் ஏராளாமாயுண்டு. கிறிஸ்துவின் வருகை மிகவும் சமீபமாக இருக்கும் இந்த நாட்களில், இந்த மக்களும் இரட்சிக்கப்பட வேண்டுமே என்று அவர்களுக்காக திறப்பின் வாசலில் நின்று நாம் ஜெபிக்க வேண்டும். நம்மோடு கூட வேலை செய்பவர்களில் அநேகர் கிறிஸ்துவை அறியவில்லையே, நாம் சும்மா நான் மட்டும் இரட்சிக்கப்பட்டிருக்கிறேன் என்று திருப்தியோடு வாழ்ந்து விட முடியுமா? கூட வேலை செய்கிறவர்கள் இரட்சிக்கப்பட வேண்டுமே என்று பெருமூச்சுகளோடு, கர்த்தரிடம் திறப்பின் வாசலில் நின்று ஜெபிக்கிறவர்களாக நாம் மாற வேண்டும். நம் ஜெபத்தை கேட்டு கர்த்தர் அவர்களை இரட்சிப்பார். அவர்களையும் கிருபையாக ஏற்று கொள்வார். ஆமென் அல்லேலூயா!

எனக்காய்ப் பேசிட நாவு வேண்டும்

என்னைப்போல் அலைந்திட கால்கள் வேண்டும்
என்னில் அன்புகூர ஆட்கள் வேண்டும்
அதை உன்னிடம் கேட்கிறேன் - தரவேண்டும்
அழைக்கிறார் இயேசு
அவரிடம் பேசு நடத்திடுவார்

மந்தையில் சேரா ஆடுகளே
எங்கிலும் கோடி கோடி உண்டே
சிந்தையில் ஆன்ம பாரம் கொண்டே
தேடுவோம் வாரீர் திருச்சபையே - மந்தையில்

**ஜெபம்:** எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, கிருபையாய் எங்களை இரட்சித்தீரே உமக்கு நன்றி. எங்களோடு வேலை செய்யும் ஒவ்வொருவரையும் கூட உம்மிடத்தில் கொண்டு வருகிறோம் தகப்பனே, அவர்களும் எப்படியாவது உம்முடைய அன்பை கண்டு கொள்ள கிருபை தருவீராக. அவர்களை நாங்கள் நேசிக்கிறோமே, அவர்கள் இரட்சிக்கப்படவில்லை என்றால் நரக ஆக்கினைக்கு உட்படுவார்களே, தயவாய் அவர்களையும் இரட்சிப்பீராக. அவர்களும் உம்முடைய மந்தையில் சேர்க்கப்படுவார்களாக. உமக்காய் பேசிட, உமக்காய் வாழ்ந்திட உம்மில் அன்புகூருகிறவர்களாக எங்களை படைக்கிறோம், ஏற்று எங்களை வழிநடத்தும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

# *38.* இயேசுகிறிஸ்துவின் சிலுவை பாதையும் பாடுகளும்

*அப்பொழுது அவரைச் சிலுவையில் அறையும்படிக்கு அவர்களிடத்தில் ஒப்புக்கொடுத்தான். அவர்கள் இயேசுவைப் பிடித்துக்கொண்டு போனார்கள். அவர் தம்முடைய சிலுவையைச் சுமந்துகொண்டு, எபிரெயு பாஷையிலே கொல்கொதா என்று சொல்லப்படும் கபாலஸ்தலம் என்கிற இடத்திற்குப் புறப்பட்டுப்போனார்கள். அங்கே அவரைச் சிலுவையில் அறைந்தார்கள்; அவரோடேகூட வேறிரண்டுபேரை இரண்டு பக்கங்களிலும் இயேசுவை நடுவிலுமாகச் சிலுவைகளில் அறைந்தார்கள் - யோவான் 19:16-18.*

இன்றைய தியானத்தில் இஸ்ரவேலில் இயேசுகிறிஸ்து சிலுவையை சுமந்து சென்ற பதினான்கு நிலையங்களையும் அவை எப்படி அங்கு அமைக்கப்பட்டிருக்கின்றன என்பதை குறித்தும் தியானிக்க இருக்கிறோம்.

கெத்சமெனே தோட்டத்தில் கைது செய்யப்பட்டு, இயேசுகிறிஸ்து பிரதான ஆசாரியனாகிய காய்பாவின் வீட்டிலிருந்து பிலாத்துவின் அரண்மனைக்கு கொண்டு செல்லப்பட்டு, அங்கு நியாயம் விசாரிக்கப்படுகிறார். பிலாத்து அவரிடம் குற்றம் ஒன்றையும் காணாமல் அவரை விடுதலையாக்க தீர்மானித்த போது யூதர்கள் அவரை சிலுவையில் அறைய சொல்லி சத்தமிட்டபடியால், அவரை சிலுவையில் அறையும்படிக்கு அவர்களிடத்தில் ஒப்புக்கொடுத்தான். எருசலேமில் இயேசு கிறிஸ்து சிலுவை சுமந்த பாதை 14 நிலையங்களாக பிரிக்கப்பட்டு இருக்கிறது.

இது சிலுவை பாதை அல்லது Via Dolorosa என்றழைக்கப்படுகிறது.

1. பிலாத்து இயேசுவை சிலுவையில் அறைய ஒப்புக்கொடுத்தல் (யோவான் 19:16). இப்போது பிலாத்துவின் அரண்மனையில் அரபிய பெண்களுக்கு பாடம் சொல்லி கொடுக்கும் இடமாக மாற்றப்பட்டுள்ளது. இங்கிருந்து முதலாம் நிலையம் ஆரம்பிக்கப்படுகிறது.

2. இயேசுவின் மேல் சிலுவை சுமத்தப்படுகிறது. இங்கு ரோம போர்ச்சேவகர், அவரை வாரினால் அடிப்பித்து, முள்ளுகளினால் ஒரு முடியை உண்டு பண்ணி, அவர் சிரசின்மேல் வைத்து, சிவப்பான அங்கியை உடுத்திய இடம் (யோவான் 19:1-2).

3. இயேசுகிறிஸ்து முதன் முறையாக சிலுவையின் பாரம் தாங்காமல் கீழே விழுகிறார்.

4. இயேசுகிறிஸ்துவின் தாயாகிய மரியாள் தன் மகன் சிலுவை சுமந்து செல்வதை காண்கிற இடம். இதில் ஒரு சிறிய ஆலயத்தை கட்டியிருக்கிறார்கள்.

5. சிரேனே ஊரானாகிய சீமோனை சிலுவையை சுமந்து கொண்டு வரும்படி அதை அவன் மேல் வைத்தார்கள் (லூக்கா 23:26).

6. வெரோனிக்கா என்னும் சகோதரி இயேசுவின் முகத்தை தன்னிடம் இருந்த துணியால் துடைத்த இடம். அந்த துணியில் இயேசுவின் முகம் பதிந்திருப்பதாக கூறப்படுகிறது.

7. இயேசுகிறிஸ்து இரண்டாம் முறையாக கீழே விழுகிறார்.

8. எருசலேமின் குமாரத்திகளே, நீங்கள் எனக்காக அழாமல், உங்களுக்காகவும், உங்கள் பிள்ளைகளுக்காகவும் அழுங்கள் என்று இயேசுகிறிஸ்து சொன்ன இடம் (லூக்கா 23:27-31).

*9. இயேசுகிறிஸ்து மூன்றாம் முறையாக கீழே விழுகிறார்.*

*மேற்கண்ட ஒன்பது நிலையங்களும் சந்தடி நிறைந்த பாலஸ்தீனியரின் கடைவீதிகளுக்கு நடுவே இருக்கிறது.*

*10-14 நிலையங்கள் Holy Sepulchre என்னும் பெரிய ஆலயத்தின் உள்ளே அமைந்துள்ளது.*

*10. இயேசுகிறிஸ்து உடுத்தியிருந்த துணி உரியப்படுகிறது.*
*11. இயேசு கிறிஸ்து சிலுவையில் ஆணிகளால் கடாவப்படுகிறார்.*
*12. இயேசுகிறிஸ்து சிலுவையில் தொங்கி மரிக்கிறார். இயேசுகிறிஸ்து சிலுவையில் தொங்கி இருந்த கொல்கதா மலையின் பெரிய கற்பாறை ஒரு பெரிய கண்ணாடியில் மூடப்பட்டு பார்வைக்கு வைக்கப்பட்டிருக்கிறது. பக்கத்தில் இயேசுகிறிஸ்துவின் தாயார் மரியாளின் இருதயத்தை ஒரு பட்டயம் ஊடுருவி இருப்பதைப் போன்று சிலையில் வடிக்கப்பட்டிருக்கிறது. இயேசுகிறிஸ்து சிலுவையில் தொங்குவதை போன்று பிரத்யேகமாக செய்திருக்கிறார்கள்.*
*13. இயேசுவின் சரீரம் சிலுவையிலிருந்து இறக்கப்படுகிறது. யோசேப்பு அந்த சரீரத்தை பிலாத்துவினிடத்தில் கேட்டு பெற்று கொள்கிறான் (யோவான் 19:38). இவை அங்கு படங்களாக சித்திரிக்கப்பட்டுள்ளன. அந்த படத்தில் சிறு சிறு தூதர்களும் தங்கள் கண்களை ஒரு துணியால் துடைத்தபடி பறந்து செல்லும் காட்சி மனதை உருக்க வைக்கும். அங்கு பக்கத்திலேயே நிக்கோதேமு வெள்ளைப்போளமும் கரிய போளமும் கலந்து,*

இயேசுகிறிஸ்துவின் சரீரத்தை சுகந்த வர்க்கங்களுடனே சீலைகளில் சுற்றி கட்டின இடம் உள்ளது (யோவான் 19:40).

14. இயேசுகிறிஸ்துவின் சரீரம் ஒரு புதிய கல்லறையில் வைக்கப்படுகிறது (யோவான் 19:41).

இந்த 14 நிலையங்களையும் ஒவ்வொரு வெள்ளிக்கிழமைகளிலும் மதியம் மூன்று மணிக்கு Franciscans எனப்படும் கிறிஸ்தவர்கள் ஊர்வலமாக வருகிறார்கள். இயேசுகிறிஸ்து கூறின ஏழு வார்த்தைகளும் இந்த 14 நிலையங்களில் அடங்கி விடுகிறது. இந்த சிலுவை பாதை சரியானது அல்ல, மற்ற ஒரு பாதை உண்டு என்றும் கூறப்படுகிறது. எது எப்படியாயிருந்தாலும், இயேசுகிறிஸ்து சிலுவையை சுமந்து சென்றது உண்மை, அவர் கொல்கதா மலையில் சிலுவையில் அறையப்பட்டது உண்மை, அவருடைய பாடுகள் அத்தனையும் உண்மை! தம் ஜீவனை அந்த கொடிய குரிசில் பிதாவினிடம் அர்ப்பணித்து மரித்ததும் உண்மை, அப்படியே மூன்றாம் உயிரோடெழுந்ததும் உண்மை! ஆமென் அல்லேலூயா!

இயேசுகிறிஸ்துவின் சரீரம் வைக்கப்பட்ட இடம் வேறு இடம் என்று எருசலேமிலே வேறு ஒரு இடத்திற்கு கூட்டி செல்கிறார்கள். அங்கு கபாலஸ்தலம் என்னும் இடத்திற்கு இயேசுகிறிஸ்து சிலுவையை சுமந்து செல்கிறார் (யோவான் 19:17) என்பதை வெளிப்படுத்தும்படியாக கபாலம் போன்ற ஒரு மலை இங்கு உள்ளது. மற்றும், அவர் சிலுவையில் அறையப்பட்ட இடத்தில் ஒரு தோட்டமும், அந்தத் தோட்டத்தில் ஒருக்காலும் ஒருவனும் வைக்கப்பட்டிராத ஒரு புதிய கல்லறையும் இருந்தது (யோவான் 19:41) என்பதை

*குறிக்கும் வகையில் ஒரு தோட்டமும் உள்ளது. இந்த இடத்தை பார்த்தால் இதுதான் சரியான இடமோ என்று தோன்றும். இந்த இடம் Garden Tomb என்றழைக்கப்படுகிறது. இயேசுகிறிஸ்துவின் சரீரத்தை வைத்த இடத்தை குறித்த சர்ச்சைகள் இருந்தாலும், ஒன்று மட்டும் சத்தியம், இயேசுகிறிஸ்து இரண்டு இடத்திலும் இல்லை. அவர் சாவை வென்று உயிரோடு எழுந்தார். ஆமென் அல்லேலூயா!*

*ஏறுகின்றார் தள்ளாடி தவழ்ந்து களைப்போடே*
*என் இயேசு குருசை சுமந்தே*
*என் நேசர் கொல்கதா மலையின் மேல்*
*நடந்தே ஏறுகின்றார்*

*இந்த பாடுகள் உந்தன் வாழ்வுக்காய்*
*சொந்தப்படுத்தி ஏற்று கொண்டார்*
*நேசிக்கின்றாயோ இயேசுநாதரை*
*நேசித்து வா குருசெடுத்தே*

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, இந்த நல்ல நாளுக்காக உம்மை துதிக்கிறோம். எங்களுக்காக பாவமறியாத இயேசுகிறிஸ்து கொடிய குருசை சுமந்து, போர் சேவகர்களால் வாரினால் அடிக்கப்பட்டு, நிந்தையை சுமந்தவராக கொல்கதா மலையின் மேல் ஏறி, சிலுவையில் அறையப்பட்டு, தம் கடைசி சொட்டு இரத்தத்தையும் சிந்தி அந்த கோர குருசிலே மரித்தாரே, எங்கள் பாவங்கள் அல்லவோ அவரது சரீரத்தில் ஆணிகளை கடாவ வைத்தது, எங்கள் பாவங்கள் அல்லவோ அவரை இந்த பாடுகளை சகிக்க வைத்தது. எங்களை மீண்டும் ஒரு விசை*

உம்மிடத்தில் அர்ப்பணிக்கிறோம் தகப்பனே, எங்களை மன்னித்து உம்முடைய பிள்ளைகளாய் ஏற்று கொள்வீராக. இயேசுகிறிஸ்துவின் பாடுகளுக்காக உமக்கு நன்றி செலுத்துகிறோம். அந்த பாடுகளினாலே எங்களுக்கு இரட்சிப்பை இலவசமாக கொடுத்தீரே உமக்கு நன்றி. அவருடைய தழும்புகளால் நாங்கள் குணமாகிறோமே அதற்காக உமக்கு நன்றி. இயேசுகிறிஸ்துவின் பாடுகளை சிந்திக்கிற ஒவ்வொருவரையும் இரட்சித்தருளும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

# *39.* இயேசுவை கொன்றது யார்?

*அந்த இயேசுவை நீங்கள் பிடித்து, அக்கிரமக்காரருடைய கைகளினாலே சிலுவையில் ஆணியடித்துக் கொலைசெய்தீர்கள் - அப்போஸ்தலர் 2:23.*

இயேசுகிறிஸ்துவை யார் கொலை செய்தார்கள் என்பதைக் குறித்த வாதம் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக இருந்து வருகிறது. மத்திய ஆண்டுகளில் *(Middle age)* குருசேடர்கள் என்று சொல்லப்படும் கிறிஸ்தவர்கள் தவறாக வழிநடத்தப்பட்டு, துருக்கியர் கையிலிருந்து எருசலேமை விடுவிப்பதற்காக வந்தபோது, அநேக யூதர்களை அவர்கள்தான் கிறிஸ்துவை கொலை செய்தார்கள் என்று கொன்று போட்டார்கள். யூதர்களை அவர்கள் கிறிஸ்துவை கொலை செய்தவர்கள் என்று பேரிட்டனர்.

இந்த நாளிலும் இந்த எண்ணம் நம் அனைவருக்குள்ளும் இருக்கிறது. வேதம் என்ன சொல்கிறது? மத்தேயுவில் நாம் வாசிக்கும்போது, ரோமர்களே அதற்கு காரணம் என்று சொல்லப்படுகிறது. ரோம கவர்னர் பொந்தியு பிலாத்து கிறிஸ்துவை பாவமில்லாதவர் என்று அறிக்கையிட்டாலும் சிலுவையில் அறைய ஒப்புக்கொடுத்தான். ரோம வீரர்கள் அவரை சிலுவை பாதையில் நடத்தி சென்று, கொல்கதா மலையில் அவரை சிலுவையில் அறைந்தார்கள்.

பேதுரு இவற்றை எல்லாம் அறிந்திருந்தும், அந்த இயேசுவை நீங்கள் பிடித்து, அக்கிரமக்காரருடைய கைகளினாலே சிலுவையில் ஆணியடித்துக் கொலைசெய்தீர்கள் என்றார். அவரும் யூதர்களையே குற்றம் சாட்டினார்.

ஆனால் உண்மையை நாம் ஆராய்ந்து பார்த்தால், நாம் ஒவ்வொருவரும் கர்த்தரை சிலுவையில் அறைந்திருக்கிறோம். நம் பாவங்களே அவரை சிலுவையில் அறைய வைத்தது. சிலுவையிலே யூதர்களின், ரோமர்களின் பாவங்களை சுமந்த கிறிஸ்து நம் பாவங்களையும் சுமந்து தீர்த்தார்.

ஆகையால் கிறிஸ்துவின் விலையேறப் பெற்ற இரத்தத்தால் கழுவப்பட்ட ஒருவரும் கிறிஸ்துவை யார் சிலுவையில் அறைந்தார்கள் என்று வாக்குவாதம் செய்யக்கூடாது. நம் அனைவரின் பாவத்திற்காகவே அவர் சிலுவையில் அறையப்பட்டார். தமது இரத்தத்தை சிந்தினார்.

இயேசுகிறிஸ்து நம் அனைவருக்காகவும் சிலுவை மரணத்தை ஏற்றுக்கொண்டு, தம் ஜீவனை நமக்காக, நம் பாவங்களுக்காக ஜீவாதார பலியாக ஒப்புக்கொடுத்தார். அதை நாம் ஏற்றுக்கொள்ளும்போது நம் பாவங்கள் மன்னிக்கப்பட்டு, தேவ சமாதானத்தை பெற்றுக் கொள்கிறோம். அல்லேலூயா!

நம்முடைய பாவங்கள் ஒவ்வொன்றும் அவரை சிலுவைக்கு கொண்டு சென்றது என்பதை உணர்ந்தவர்களாக, அறிந்தவர்களாக, சிலுவையண்டை வந்து நம் பாவங்களை அறிக்கையிட்டு, பாவ மன்னிப்பை பெற்றுக் கொண்டவர்களாக பரிசுத்தமாக வாழ கர்த்தர்தாமே இரக்கம் பாராட்டுவாராக! ஆமென் அல்லேலூயா!

சிலுவை அண்டையில்
நம்பி வந்து நிற்கையில்
பாவ பாரம் நீங்கி வாழ்வடைந்தேன்
எந்த நேரமும் எனதுள்ளத்திலும்

*பேரானந்தம் பொங்கிப் பாடுவேன்*

*நான் உம்மைப் பற்றி இரட்சகா*
*வீண் வெட்கம் அடையேன்*
*பேரன்பைக் குறித்தாண்டவா*
*நான் சாட்சி கூறுவேன்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, இயேசுகிறிஸ்து எங்கள் பாவத்தினிமித்தம் சிலுவையில் பலியாகி எங்களுக்கு இரட்சிப்பை கொடுக்கும்படி ஆக்கினையை சுமந்தாரே அவருடைய இரக்கத்திற்காக அவருக்கு நன்றி செலுத்துகிறோம். உலக மக்கள் யாவருக்காகவும் அவர் சிலுவையை சுமந்தபடியினால் கிறிஸ்தவர்கள் மாத்திரமல்ல, அவர்மேல் விசுவாசம் வைத்து தங்கள் பாவத்தை அறிக்கை செய்கிற யாவரையும் கர்த்தர் கிருபையாய் மன்னித்து, இரட்சிப்பை இலவசமாக கொடுப்பதற்காக நன்றி செலுத்துகிறோம். அந்த இரட்சிப்பை பெற்றுக் கொண்டு, பரலோக இராஜ்யத்திற்கு பாத்திரவான்களாக மாற ஒவ்வொருவருக்கும் கிருபை செய்வீராக. இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

## 40. மணவாளன் வருகிறார்

*திருவசனத்தைக் கேட்கிறவர்களாய் மாத்தரமல்ல, அதின்படி செய்கிறவர்களாயும் இருங்கள் - யாக்கோபு 1:22.*

ஒரு கூட்டத்தில் பேசும்படியாக ஒரு அருமையான ஊழியர் அழைக்கப்பட்டிருந்தார். அதற்காக அவர் ஜெபித்து கொண்டிருந்த போது, பிரசங்கத்திற்கு சற்று முன்பு தேவன் ஒரு தரிசனத்தை அவருக்கு காண்பித்தார். தன் திருமணத்திற்கு தன்னை ஆயத்தப்படுத்தி கொண்டிருந்தாள் ஒரு மணப்பெண். சபைமுன் மண மேடைக்கு வந்து மணமகனை கைப்பிடிக்க போகும் அந்த தருணத்திற்காக தன்னை அலங்காரம் செய்து கொண்டிருந்தாள்.

முகத்திற்கு செய்ய வேண்டிய அலங்காரம், சிகைக்கு செய்ய வேண்டிய அலங்காரம், அணியப்பட வேண்டிய அணிகலன்கள், ஆடை, உதடுக்கு செய்ய வேண்டிய மெருகு என்று மணிக்கணக்காக அலங்காரம் செய்து கொண்டு தன்னையே கண்ணாடியில் பார்த்து பார்த்து ரசித்தவளாய் இருந்தாள். இங்கே மணவாளன் மேடையில் மணவாட்டியை சந்திக்கும்படி ஆவலாய் காத்து கொண்டிருக்கிறான். ஒரு மணி நேரம், இரண்டு மணி நேரம் என்று மணித்துளிகள் நகர்ந்து கொண்டே போனது. அந்தோ பரிதாபம்! மணப்பெண் வரவேயில்லை. மணப்பெண் தான் இருந்த இடத்திலே தன்னை அலங்கரித்து கொண்டேயிருந்தாளே ஒழிய மணவாளனை சந்திக்க புறப்படவேயில்லை.

இதேப்போலத்தான் இன்று ஒவ்வொரு கிறிஸ்தவர்களின் நிலையும், திருச்சபையின் நிலையும் உள்ளது. அநேக

சத்தியங்களை தினந்தோறும் கேட்கிறோம். கேட்டு கேட்டு நம்மை சரிப்படுத்தி கொள்வது உண்மைதான். இருப்பினும் நான் இன்னும் தகுதியடையவில்லை, தகுதியான பின் ஊழியம் செய்கிறேன் என்று நம்மில் நாமே கூறிகொண்டு உட்கார்ந்து விடுகிறோம்.

நம்மை நாம் அலங்கரித்து கொண்டிருப்பதிலேயே திருப்தியடைந்து விடாமல் செயல்படுகிறவர்களாய் மாறுவோம். உதாரணமாக, சமைப்பது எப்படி என்ற புத்தகத்தை ஆர்வமாய் படித்து படித்து அதை மூளை அறிவில் வைத்திருந்தால் சமைக்க கற்று கொள்ள முடியாது. படித்தவற்றை செயல்படுத்தி பார்த்தால்தான் பிரயோஜனம் உண்டாகும். நாம் செயல்படுகிறவர்களாய் மாறும்படி தேவன் நம்மை எதிர்ப்பார்க்கிறார்.

கர்த்தரின் வருகைக்கான அடையாளங்கள் அவர் வருகை மிகவும் சீக்கிரம் என்பதை வெளிப்படுத்தி கொண்டேயிருக்கின்றன. இந்நாட்களில்அநேகர் கர்த்தரை தங்கள் சொந்த இரட்சகராக ஏற்று கொண்டிருக்கின்றனர். கொரோனா மூலம் இந்நாட்களில் எதிர்பாராத மரணங்கள், வேலையின்மை, இவையாவும் கர்த்தரின் வருகையை தெரிவிக்கினறன அல்லவா? நாம் இன்னும் ஆயத்தமாகவில்லை என்று உட்கார்ந்து கொண்டிருந்தால், எப்போது மற்றவர்களை ஆயத்தப்படுத்த முடியும்? இன்னும் எத்தனையோ பேர் நீங்கள் இருக்கும் தெருவிலேயே கர்த்தரை குறித்து கேள்விப்படவில்லையே! 'எங்களுக்கு யாரும் கிறிஸ்துவை குறித்து கூறவில்லை, கூறியிருந்தால் நாங்களும் இரட்சிக்கப்பட்டிருப்போம்' என்று யாரும் உங்களை

*குறைகூறாதபடி, ஒரு நாளில் ஒருவருக்காவது சுவிசேஷம் சொல்வோமா?*

*பிரியமானவர்களே, நமக்கு கொடுக்கப்பட்டிருக்கும் கொஞ்ச காலத்தில் மணவாட்டியாகிய நாம் மணவாளனாகிய கிறிஸ்துவுக்காக எதையாவது செய்வோமா? மணவாளன் நம்மை கண்டு களிகூறும்படியாக, என் பிரியமே என் உத்தமியே என்று நம்மை புகழும்படியாக அவருக்காக எதையாவது நம்மால் இயன்றதை செய்வோமா? 'இதோ, சீக்கிரமாய் வருகிறேன், அவனவனுடைய கிரியைகளின்படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடேகூட வருகிறது' - (வெளிப்படுத்தின விசேஷம் 22:12) என்ற இயேசுகிறிஸ்து சீக்கிரம் வருகிறார். ஆயத்தமாவோம், ஆயத்தப்படுத்துவோம். மாரநாதா! ஆமென் அல்லேலூயா!*

*திருடனை போல் அவர் வருகை*
*தீவிரமாய் நிறைவேறிடுதே*
*ஆயத்தமில்லாத அவனியில்*
*அழுது புலம்பி கதறுவாரே*
*நம் இயேசு மகராஜன் சீக்கிரம் வருகிறார்*
*அவர் வருகையை சந்திக்க ஆயத்தமாவோமா?*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக பிதாவே, கிறிஸ்துவின் வருகை மிக சமீபமாக இருப்பதால், மணவாட்டியாகிய சபை ஆயத்தமாகவும், மற்றவர்களை ஆயத்தப்படுத்தவும் தீவிரப்படுத்துவீராக. இன்னும் உலக கவலைகளில் மூழ்கி, வருகைக்கு ஆயத்தமாயில்லாதபடி கைவிடப்பட்டவர்களாக மாறி போகாதபடி, ஆயத்தமாக கிருபை தாரும். மணவாளனை எதிர்கொண்டு வருகிற மணவாட்டியாக ஒவ்வொரு*

*சபைகளையும் மாற்றுவீராக. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

ரோமர் ***5:8-10***

நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே, தேவன் நம்மேல் வைத்த தமது அன்பை விளங்கப்பண்ணுகிறார்.

இப்படி நாம் அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்க, கோபாக்கினைக்கு நீங்கலாக அவராலே நாம் இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே.

நாம் தேவனுக்குச் சத்துருக்களாயிருக்கையில், அவருடைய குமாரனின் மரணத்தினாலே அவருடனே ஒப்புரவாக்கப்பட்டோமானால், ஒப்புரவாக்கப்பட்டபின் நாம் அவருடைய ஜீவனாலே இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே.